3-3

# பாலா திரிபுர சுந்தரியின் லீலா விேனாதங்கள்




கவிஞர் நெமிலி எழில்மணி



வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

# அணிந்துரை

அருள்மிகும் தேவி அன்னை பாலா திரிபுர சுந்தரியின் அருள் விளையாடல்களை அழகுத் தமிழிலே எனது அன்பு நண்பர் கவிஞர் நெமிலி எழில்மணி அவர்கள் "பாலாதிரிபுரசுந்தரியின் லீலா வினோதங்கள்" என்ற தலைப்பிலே, வானதி பதிப்ப கத்தார் மூலமாக வெளியிட வைத்து புண்ணியம் பெற்றுக்கொண்டார் - நமக்கும் புண்ணியம் பெற்றுத் தந்தார். ஆம்! வடஆற்காடு அம்பேத்கார் மாவட்டம் நெமிலியில் சின்னஞ்சிறு பெண் வடிவில் சிங்கார மாகக் கொலுவிருக்கும் அன்னை பாலாவை ஆசைதீர தரிசனம் செய்து அகம் குளிர்ந்தவன் நான். சிவம் பெருக்கும் சீலர் நெமிலி ஸ்ரீ டி.கே. சுப்ரமண்ய ஐயர் கனவிலே தோன்றி "ஆற்றிலே வருவேன்" என அருள் வாக்கு தந்து, அதன்படியே கிடைத்து அவரது வீட்டையே தனது கோயிலாக்கிக்கொண்டு நெமிலியிலே அன்னை பாலா அரசு புரிந்து வருகிறாள்.

"மூர்த்தி சிறிதாயினும் கீர்த்தி பெரிது" என்ற பழமொழிக்கு சிறந்த உதாரணம் நெமிலியின் பாலா திரிபுரசுந்தரிதான்!

அந்த அம்பாளுக்கு நடைபெறும் மஹன்னி யாச பூர்வக ருத்ராபிஷேகமும், சப்தசதி பாராயணமும், மந்திர புஷ்ப வேத கோஷமும் எனக்கு எப்படிப்பட்ட மன அமைதி தந்தது தெரியுமா?

தங்களது சொந்த வீடு என்றோ, தங்களது குடும்ப தெய்வம் என்றோ, எந்தவித பாகுபாடும் இன்றி அனைவரையும் அன்னையை தரிசிக்க அழைத்து அம்பாளின் அருளைப் பெற வழிவகுக்கும் ஸ்ரீபாலா பீடத்தார் பாராட்டுக்குரியவர்கள்.

"ஸ்ரீபாலா" என்னும் மூன்றெழுத்துக்காரியின் மூலமந்திரம் "ஐம்-க்ளீம்-சௌ" என்னும் மூன்று பீஜங்கள் உடையது.

அவள் கொலுவிருக்கும் "நெமிலி"யும் மூன்றெழுத்து. அவளது கவசம் பாடிய அமரர் "சீகாழி"யும் மூன்றெழுத்து! ஏன்! அவளது அழகு நூல்களைப் படைக்கும் "வானதி"யும் மூன்றெழுத்து தானே!

"அருள், புகழ், சக்தி" என்று அவள் "அன்பை" அள்ளித் தெளித்துக் கொண்டிருக்கிறாள் இப்புவனி மீது!

அதனால்தானோ என்னவோ "ஜெமினி" யென்னும் மூன்றெழுத்து ஆலமரத்தின் ஆணிவேரான "வாசன்" என்னும் மூன்றெழுத்து மேதை மூலம் அறிமுகப்படுத்தப்பட்ட இந்த "கணேஷ்" என்னும் மூன்றெழுத்துக்காரனுக்கு அன்னையின் நூலுக்கு முகவுரை எழுதும் பாக்கியம் கிடைத்துள்ளது.

"கலவை"யில் ஞானஸ்நானம் பெற்று, "காஞ்சி"யில் மடாதிபதியாகி ஞானதீபமாக வாழ்ந்த ஸ்ரீ மஹாபெரியவாளும் "நெமிலி" வந்து "ஸ்ரீபாலா" தரிசனம் பெற்றதும்தான் எத்தனை பொருத்தம்.

"சக்தி"யின் 51 பீடங்களைத் தொடர்ந்து "52"வது பீடமாக நெமிலி ஸ்ரீ பாலாதிரிபுர சுந்தரி பீடம் திகழ்கிறது.

"பாலுக்கு மிஞ்சிய உணவில்லை. பாலாவுக்கு மிஞ்சிய தெய்வமில்லை" என்ற கொங்கணிச்சித்தரின் வரிகள் அவளது அருளை விளக்கும் அற்புத வார்த்தை கள் அல்லவா!

அவள் புரிந்த அற்புதங்களை வானதி பதிப்பகத்தார் வெளியிட்ட கவிஞர் நெமிலி எழில் மணியின் "திரிபுரசுந்தரி திருவிளையாடல், அன்னை பாலா அற்புதங்கள்" என்ற நூல்களிலே படித்து பரவசம் அடைந்தவன் நான். காஞ்சிப் பெரிய வாளைப் பற்றிய "கலவையில் பிறந்த பேரொளி" என்ற வானதி நூலிலும் அவரது ஆழ்ந்த - பக்திபூர்வமான - எழுத்து நடையைக்கண்டு பிரமித்தவன் நான். ஐந்தாறு தடவைகள் படித்துப் படித்து கண்கலங்கியவன் நான். அதனை விவரித்து எழுதிட நான் கவியுமல்ல! காவியுமல்ல!! நல்ல எழுத்துக்களை - உள்ளத்து உணர்ச்சிகளை — ஆன்மீகப்பயிற்சிக்கு அழைத்திடும் அன்பு வார்த்தைகளை — கவிஞர் நெமிலி எழில்மணியின் நடையில் கண்டேன்! மனமுவந்த பாராட்டுக்கள்.

பலவிதமான நூல்களை வெளியிட்டாலும், பக்தி நூல்களைப் படைப்பதில் புத்தக வித்தகர் வானதி திருநாவுக்கரசு அவர்கள் முத்திரை பதித்து வருகிறார்கள்! ஸ்ரீ காஞ்சி மகானை இந்த எளியவன் தரிசனம் செய்தபோது புன்முறுவலுடன் "நீ கங்காவோட பிள்ளைதானேடா" என அன்னையை நினைவூட்டி அருள் மழை பொழிந்தார். அந்த ஸ்ரீ மகாப் பெரியவாளின் "தெய்வத்தின் குரல்" என்னும் நூல்களை வெளியிட்ட வானதியின் பணி வானத்தையே எட்டக்கூடியது. கவியரசு கண்ண தாசனின் "அர்த்தமுள்ள இந்துமதம்" பல தொகுதிகள் வெளியிட்டு, ஆன்மீகப்பணி புரிந்து பல பெரியவர் களின் ஆசி பெற்றது வானதி! அந்த வானதிப் பதிப்பகப் பெரியவர் வானதி திருநாவுக்கரசு அவர்கள் கவிஞர் நெமிலி எழில்மணியின், அன்னை பாலாவைப் பற்றிய நூல்களை உடனுக்குடன் வெளியிட்டு வருவது

மிகவும் போற்றத்தகுந்தது. பல தடவை நெமிலிக்கு சென்று ஸ்ரீபாலா தரிசனம் பெற்ற அவரின் ஆன்மீக உள்ளத்திற்கு எனது மனம் கனிந்த பாராட்டுக்கள்.

அன்னை பாலா திரிபுர சுந்தரியின் அருள் மழையால் அகிலமெல்லாம் செழிக்க பிரார்த்தனை புரிகிறேன்.

6, நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை
சென்னை – 600 034

அன்பன்
**ஜெமினிகணேஷ்**

# என்னுரை

வடஆற்காடு அம்பேத்கார் மாவட்டம், அரக்கோணம் வட்டம் நெமிலியில் அருள்மழை பொழிந்து வரும் அன்னை பாலா திரிபுர சுந்தரியின் இரண்டு இனிய நூல்களான "திரிபுர சுந்தரி திருவிளையாடல்" "அன்னை பாலாவின் அற்புதங்கள்" ஆகியவற்றை இந்த எளியவனை எழுதச்செய்து வானதியை பதிப்பிக்கச் செய்து வாசகர்கள் கரங்களிலே உலவ வரங்கொடுத்தாள் அன்னை பாலா.

தொடர்ந்து "பாலா திரிபுர சுந்தரியின் லீலா விநோதங்கள்" என்ற இந்த இனிய படைப்பை தன்னைப் பற்றிய மூன்றாவது நூலாக இன்று தாய் வரவழைத்துள்ளாள்.

"இயல் இசை நாடகம்" என்னும் முத்தமிழுக்கும் இறைவியாக விளங்கும் அன்னை பாலாவுக்கு இது மூன்றாவது நூலாக மலர்ந்துள்ளது.

இன்றைக்கு நூறு ஆண்டுகட்கு முன்னாலே சிவம் பெருக்கும் சீலர் — வைதீக சிரோன்மணி நெமிலி டி.கே. சுப்ரமண்ய ஐயர் கனவிலே தோன்றி "ஆற்றிலே வருவேன் - அழைத்துச் செல்" என அருள்வாக்கு தந்து, அப்படியே ஆற்றிலே மிதந்து வந்து சின்னஞ்சிறு பெண்போல சிற்றாடை உடுத்திக்கொண்டு ஐயரவர்கள் இல்லத்திலே ஆனந்தக் கொலுவீற்றிருக்கிறாள் அன்னை பாலா.

அவளைப் பற்றிப் பேசப்பேச இன்பம்

அவளைப் பற்றிப் பாடப் பாட இன்பம்

அவளைப் பற்றி எழுத எழுத இன்பம்

"பாலா லீலா விநோதினி" என்று ஸ்ரீ லலிதா சஹஸ்ர நாமத்தில் வருகிற வரிகளுக்கு வடிவமாக —

லீலைகள் புரியும் பாலாவாக கோலோச்சி வருகிறாள் அந்தக் குழந்தை பாலா.

ஆற்றங்கரையில் கோயில் கொண்டாள் பாலா திரிபுர சுந்தரி
அழகுடன் நெமிலி நகரினில் வந்தாள் பாலா திரிபுர சுந்தரி

எனப் போற்றுவதையன்றி வேறு என்ன நாம் செய்ய இயலும்! ஆனால் அவளோ, போற்றுதலுக்கும் தூற்றுதலுக்கும் அப்பாற்பட்டவளாகி, புன்னகை புரிந்து வருகிறாள்.

காற்றும் அவளே நீரும் அவளே
காப்பவளன்றோ அன்னை
போற்றிடில் என்ன தூற்றிடில் என்ன
அன்னை அறிவாள் உன்னை
அவள் திருவடியே வீடு நீ
அனுதினம் அவள் புகழ் பாடு

எனப் பாடவும் தோன்றுகிறது.

அவளது லீலைகளை - அவளது அருள் விளையாடலை - எழுத்துக்குள் அடைப்பது இயலாத காரியம். ஆயிரம் கதிர் வீசி அகிலத்தில் ஒளிர்கின்ற ஓர் ஆதவனை மின்மினிப்பூச்சி ஒன்று அடையாளம் காட்டுவதுபோல் நான் அவளை அடையாளம் காட்ட முனைந்துள்ளேன்.

இந்த அழகிய நூலை அன்புடன் பதிப்பித்த இறை பணிச்செம்மல் - புத்தக வித்தகர் வானதி திருநாவுக்கரசு அவர்கட்கு மனமார்ந்த நன்றி. நூல்களை எழுத எனக்கு ஊக்கம் தந்த அமரர் இசைமணி டாக்டர் சீர்காழி எஸ். கோவிந்தராஜன் அவர்கட்கு இந்நூலை காணிக்கையாக்குகின்றேன்.

22, சத்திரத்தெரு,
நெமிலி - 631 051

அன்புடன்
நெமிலி எழில்மணி

# ஸ்ரீ புவனேஸ்வரி - ஸ்வாமிகளின் புகழ்மொழிகள்

---

திருவல்லிக்கேணியிலே ஆன்மீகப் பணி புரிந்து அன்பர்களை நல்வழிப்படுத்தும் பரம ஹம்ஸராக விளங்கி வரும் ஸ்ரீமத் பரமஹம்ஸ புவனேஸ்வரி ஸ்வாமிகள் அன்னையைத் தரிசித்த நிகழ்ச்சியே அலாதியானது.

ஸ்ரீஸ்வாமிகளை திருவல்லிக்கேணியிலே சந்தித்து நெமிலியில் ஸ்ரீ பாலா பீடம் உள்ளது பற்றி கூறி ஸ்ரீபாலாவை தரிசிக்கவும் அன்பர்கட்கு அருளாசி வழங்கவும் அழைத்தோம். பாலா என்றால் ஸ்வாமி கட்கு பரம சந்தோஷம். தாம் தினமும் வழிபடும் ஸ்ரீபுவனேஸ்வரி மாதா விக்கிரகத்தையும் எடுத்துக்கொண்டு சீடர்கள் புடைசூழ அன்னை பாலாவை தரிசிக்க நெமிலிக்கு வந்தார். அன்னையின் சன்னிதியிலே வந்ததும் என்னையும் எனது உறவினர்களையும் அழைத்து "இங்கே வாங்கோ! ஒரு அதிசயம் காட்டறேன்" எனக் கூறியவாறு சின்ன டப்பி ஒன்றை எடுத்தார். அதில் ஒரு சிறிய கோலிகுண்டு போல இரும்பு குண்டு ஒன்று சின்னதாக இருந்தது. அதில் ஒரு கொக்கி இருந்தது. அந்த கொக்கியில் நூல் கட்டப்பட்டிருந்தது. அந்த நூலைப் பிடித்துக்கொண்டு, அந்த கோலிகுண்டு போன்றதான சின்ன இரும்புக் குண்டைப் பிடித்தார். அது அப்படியே ஆடாமல் அசங்காமல் தொங்க வேண்டுமல்லவா? ஏனெனில் அது இரும்பு குண்டு அல்லவா! ஆனால் நடந்தது என்ன தெரியுமோ? அந்த நூலில் கட்டப்பட்ட குண்டு

மின்விசிறி சுற்றுவதுபோல் சுற்ற ஆரம்பித்தது. ஸ்வாமிகள் எவ்வளவு கெட்டியாகப் பிடித்துக் கொண்டபோதும் அதேபோல் சுற்றியது.

உடனே நூலை கீழே விட்டுவிட, குண்டும் தரையில் விழுந்து விட்டது.

மீண்டும் நூலை எடுத்து பிடிக்க ஆரம்பித்தார். தொங்கும் நிலையிலேயே இருக்கவேண்டிய அது மீண்டும் மின் விசிறி சுற்றுவதுபோல் சுற்றத் தொடங்கியது. உடனே அதை எடுத்து டப்பியில் போட்டுக் கொண்டார்.

- எங்களுக்கு ஒன்றும் புரியவில்லை. ஸ்வாமிகள் சிரித்துக்கொண்டே பேசினார்.

“இங்கே தேவி சான்னித்யம் முழுமையாக இருக்குடா! எங்கே நான் நூலைப் பிடிக்கும்போது அந்த குண்டு அசையாமல் நிற்குமோ அங்கே சான்னித்யம் இல்லையென்று அர்த்தம். இங்கே பார்த்தீர்களா! ஃபேன் போல எப்படி சுற்றியது. ஓ! இங்கே பாலாவின் அருள் பரிபூரணமாக இருக்கிறது” என விளக்கம் கூறவும் நாங்கள் திகைத்துப் போய்விட்டோம்.

அன்னைக்கு அவர் அபிஷேகம் புரியும்போது எங்கும் பரவசமான நிலை. பாலாவின் பெருமை களைக்கூற ஆரம்பித்தார்.

“பாலாதான் ஸ்ரீ வித்யா தீட்சைக்கு முதலாக அங்கம் வகிக்கும் தேவி. ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரியைப் போன்றே உருவமைப்பு கொண்டவள். எப்போதும் ஒன்பது வயதுள்ள சிறுமி போலவே தோற்றம் கொண்டவள். தேவிக்கு பக்கத்திலேயே எப்பவும் வாசம் பண்ணுவாள். பண்டனோட புத்திரர்கள்

போருக்கு வந்தபோது தேவியின் கவசத்திலிருந்து தோன்றிய அழகான இன்னொரு கவசத்தைப் போட்டுண்டு, ''கர்ணீரதம்''னு சொல்லப்படற சின்னதான போர்த்தேரிலே ஏறிண்டு பண்ட புத்திரர்களோட போரிட்டாள். நொடிக்கு நொடி வியப்பிலே ஆழ்த்தற அந்த பாலாவோட சண்டை போடற போர் முறையைப் பார்த்துட்டு, தேவிக்கு ஆனந்தம் தாளல்லே! பரமானந்தம் அவளுக்கு. ஸ்ரீவித்யா தீக்ஷை பெறணும்னா மொதல்லே ஸ்ரீபாலா மந்திர தீக்ஷை பெற்றுண்டுதான் அதன் பின்னாலே பஞ்சதசாக்ஷி தீக்ஷயைப் பெறணும். ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரியோட அங்கதேவதை ஸ்ரீ பாலாதான். ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி உபாசனை மேற்கொள்ளணும்னா ஸ்ரீபாலாவோட கிருபைதான் முக்கியம். இவளோட அனுக்கிரஹம் இல்லாம ஸ்ரீராஜ ராஜேஸ்வரியை அடையவே முடியாது.

இவளை ''பாலை''ன்னு சொல்லுவா! ''வாலை''ன்னு சொல்லுவா! ஏன்! வாலைக்குமரின்னு கூட இவளைச் சொல்லுவா!

இவளோட அடையாளங்கள் என்ன தெரியுமோ? மலர்ந்த கழுநீர்ப்பூமேலே அமர்ந்திருப்பா! சூரியனோட சிவந்த ஒளி படரும் மேனி இவளுக்கு. அபய வரத முத்திரை, ஜபமாலை, புத்தகம் தாங்கிய நான்கு கைகள் ஸ்ரீபாலாவுக்கு.

### இதுதான் ஸ்ரீபாலா திரிபுர சுந்தரி மந்திரம்

அஸ்ய ஸ்ரீ ஸ்ரீவித்யா பாலா த்ரிபுர சுந்தரி
மஹா மந்த்ரஸ்ய தட்சிணாமூர்த்திருஷி: காயத்ரீச்
சந்த: பாலாத்ரிபுர சுந்தரி தேவதா, ஐம்பீஜம்,
ஸௌ: சக்தி: க்லீம்கீலகம் ஸ்ரீபாலா திரிபுர
சுந்தரி ப்ரசாத ஸித்யார்த்தே ஜபே விநியோக

ஸ்ரீபாலாவோட தியான ஸ்லோகம் தெரியுமோ?

**இதுதான் ஸ்ரீபாலா தியான ஸ்லோகம்**

அருண கிரண ஜாலை ரஞ்சிதா சாவகாசா
வித்ருத ஜப படீகா புஸ்தகா பீதி ஹஸ்தா
இதரகர வராட்யா புஹ்ல - கஹ்லார - ஸம்ஸ்தா
நிவசது ஹ்ருதிபாலா - நித்ய கல்யாணசீலா

**இதுதான் ஸ்ரீ பாலாவோட மூல மந்திரம்**

ஐம் க்லீம் ஸௌ
ஸௌ க்லீம் ஐம்
ஐம் க்லீம் ஸௌ

ஸ்ரீ ஸ்வாமிகள் கூட வந்திருந்த அவரது தவப் புதல்வர் ஸ்ரீ ராமகிருஷ்ண பரத்வாஜ் அவர்கள் அம்பாளைப் பற்றி சிறப்புரை ஆற்றினார்கள்.

நாங்கள் அகம் குளிர்ந்தோம். மனம் மகிழ்ந்தோம். ஸ்ரீபாலாவே நேரில் வந்ததுபோல் உணர்வு. அதன்பின் ஸ்வாமிகளின் திருக்கரங்களால் தீர்த்தப் பிரசாதம் பெற்றோம்.

தொடர்ந்து ஸ்வாமிகள் அம்பத்தூர் கங்காநகரில் ஆஸ்ரமம் அமைத்தார்கள். அங்கு ஒவ்வொரு பௌர்ணமி பூஜையும் சிறப்பாக நடைபெறலாயிற்று. ஸ்ரீ பாலாவின் அருட் கடாட்சத்தை மனமார உணர்ந்த ஸ்வாமிகள் கடந்த ஐந்து ஆண்டுகளாக ஜனவரி முதல் தேதியன்று நெமிலி ஸ்ரீபாலா பீடத்தில் "ஸ்ரீபாலா ஹோமம்" நடத்தி வருகிறார்கள். "ஞானபூமி - இதயம் பேசுகிறது" மாத பூஜையாகவும் அது மலர்கிறது. ஜனவரி முதல் தேதியன்று ஸ்ரீ ஸ்வாமிகள் நெமிலிக்கு வந்து அன்னை

பாலாவின் ஹோமம் நடத்துவதை மிகவும் புண்ணிய மாகக் கருதி வருகிறார்கள். அவரது தவப்புதல்வர் ஸ்ரீ ராமகிருஷ்ண பரத்வாஜ் அவர்களும் உடன் வந்து சிறப்பு செய்கிறார்.

"வெள்ளிக் கிழமையிலே - பாலாவின் கோயிலிலே வேதங்கள் ஒலிக்குதடி - நம் வேண்டுதல் பலிக்குதடி" என்ற இந்த எளியவன் பாடல்மீது மிகவும் பிரியம். நெமிலிக்கு வந்து அவர் நடத்தும் ஹோமத்தின் போது இந்தப் பாடலைப் பாடுமாறு அன்புக் கட்டளையிடுவார்கள்.

அதேபோல் "படவேட்டம்மா - துயர் பட விடலாமா - அடியார்களையே நீ கைவிடலாமா" என்ற எனது பாடல்மீதும் மோகம். நான் பாடும்போது தாளம் போடுவார்கள். கடந்த நான்கு ஆண்டுகளாக என்னை ஆஸ்ரமத்திற்கு வரச்சொல்லி "தீக்ஷை அளித்து சிஷ்யனாக ஆக்கிக் கொள்ளப் போகிறேன்" என்று கூறி வந்தார். எனக்கோ பயம்! நான் அதற்கு தகுதியுடையவன்தானா என்பது பற்றி ஐயம்! தினமும் ஆபீஸ் என்றும், அலுவல் என்றும், குடும்பம் என்றும், ஆலாய்ப் பறக்கும் நம்மால் தீக்ஷை பெற்றுக் கொண்டு தினசரி ஜபம் செய்துவர முடியுமா என்று சந்தேகம். நான் நழுவி நழுவி வந்தேன்.

ஆனால் **1.1.94** ஜனவரியன்று அவர் நெமிலிக்கு வரும்போது "ஸ்ரீபாலா ஹோமம்" நிறைவடையும் சமயத்திலே திடீரென இப்படி ஓர் அறிவிப்பு செய்தார்.

"நானும் கடந்த பல வருஷங்களாக நெமிலி எழில்மணியையும் அவர் குடும்பத்தில் உள்ளவாளை

யும் தீக்ஷை வாங்கிக்கணும்னு கூறி வந்தேன். அவா நழுவிண்டே இருக்கா! இன்னிக்கு விடப்போறதில்லே.

வழக்கமா சிஷ்யாதான் குருவை நாடிப் போவா! இங்கே ஸ்ரீபாலா நடைமுறையையே மாத்தறா! குரு, சிஷ்யாளை நாடற அதிசயத்தை பாலா பண்ணிண் டிருக்கா! ஆமாம்! இவாளுக்கு இன்னிக்கு - இங்கேயே - ஸ்ரீபாலா சன்னிதியிலேயே - தீக்ஷை தர்ரேன்" என அறிவிப்பு செய்து, இந்த எளியவனையும் மந்திர தீக்ஷையால் புனிதப் படுத்தி அவரது சிஷ்யர்களிலே ஒருவனாக ஆக்கிக் கொண்டார்.

அவரைக் குருநாதராக அடைய என்ன புண்ணியம் செய்தேனோ தெரியவில்லை!

எல்லாம் அன்னை பாலாவின் லீலா விநோதங்களே!

அவள் "பாலா லீலா விநோதினி" அல்லவா!

# வாரியார் ஸ்வாமிகளின் வாக்கு

அருள்மிகும் தேவி அன்னை பாலாவின் சன்னிதியில் 30.8.79 அன்று திருமுருக கிருபானந்த வாரியார் ஸ்வாமிகள் முதல் தடவையாக ஸ்ரீ பாலாவை தரிசித்த போது, அவரிடமிருந்து வெளிப்பட்ட ஓர் அருள்வாக்கு.

"எழில்மணி, ஸ்ரீபாலாவின் சன்னிதி இப்படி அமைந்திருப்பது "விட்டகுறை - தொட்டகுறை" என்று கூறிய வாக்குதான் அது.

நெமிலி ஸ்ரீபாலா திரிபுர சுந்தரி அன்னையின் பீடம் ''வீட்டு நடுவில் உள்ள ஹாலில்தான்'' அமைந்துள்ளது. வீட்டின் பக்கத்திலே அவள் கிடைத்த ஆறு அமைந்துள்ளது. அன்னை பாலாவாய் - பத்து வயதுடைய பாலா திரிபுர சுந்தரியாய் அருள் மழை பொழிந்து வருகிறாள் என்பது அனைவரும் அறிந்ததே. அன்னையின் வரலாற்றைப் படித்தவர்கள் நெமிலி ஸ்ரீ டி.கே. சுப்ரமண்ய ஐயர் கனவிலே தோன்றி "ஆற்றிலே வருவேன் அழைத்துச் செல்'' என ஆணையிட்டு அப்படியே கிடைத்து, கடந்த நூறாண்டுகட்கும் மேலாக ஐயரவர்கள் வீட்டுக் கூடத்தையே தனது பீடமாக்கி அருள்மழை பொழிந்து வருகிறாள்'' என்ற விவரத்தை அறிவார்கள். அந்த விவரமும் அன்னை பாலா திரிபுரசுந்தரியைப் பற்றி வானதி பதிப்பகம் வெளியிட்டுள்ள "திரிபுர சுந்தரி திரு விளையாடல்", ''அன்னை பாலாவின் அற்புதங்கள்'' என்ற இரு புத்தகங்களிலே மிகவும் விரிவாகச் சொல்லப் பட்டுள்ளது.

"விட்டகுறை – தொட்டகுறை" என வாரியார் ஸ்வாமிகளின் வாக்குக்கு என்னதான் பொருள்? அதை அறிந்துகொள்ளும் ஆவல் தினம் தினம் பெருகிற்று.

அதன்பின் பத்து ஆண்டுகள் கழித்து எனது நண்பர் கவிஞர் ரெட்டிவலம் கல்யாணசுந்தரம் அவர்கள் "கருவூர் சித்தர்" பாடல்களைத் தந்து "இதிலே உள்ள பாடல்களைப் பாருங்களேன்" என்றார் அதிசயத்துடன்.

ஆம்! அதிசயம்தான். கி.பி. 11-ம் நூற்றாண்டில் வாழ்ந்ததாகச் சொல்லப்படும் கருவூர்ச் சித்தர் கடந்த 100 ஆண்டுகட்கு முன்னால்தான் கனவிலே தோன்றி கரங்களில் தவழ்ந்த அந்த பாலா திரிபுர சுந்தரியைப் பற்றி எழுதியுள்ளது ஆச்சரியம்! ஆச்சரியம்!! ஆச்சரியம்!!!

நெமிலியில் உள்ள ஸ்ரீபாலா பீடம் ஆற்றை ஒட்டிய தெருவில் உள்ள நெமிலி ஸ்ரீ டி.கே. சுப்ரமண்ய ஐயர் இல்லத்தில் உள்ள நடுக்கூடத்தில் அமைந் துள்ளது.

அந்த அமைப்பை கருவூர் சித்தரின் முதல் செய்யுளிலேயே கண்டபோது மெய் சிலிர்த்தது.

ஆதியந்தம் வாலையவள் இருந்த வீடே
ஆச்சரியம் மெத்தமெத்த அதுதான் பாரு
சோதியந்த நடுவீடு பீடமாகி
சொகுசுபெற வீற்றிருந்தாள் துரைப்பெண்ணாத்தாள்

வீதியந்த ஆறுதெரு அமர்ந்த வீதி
விளையாடி நின்றதிரு மாளிகண்டாய்
பாதிமதி சூடியே இருந்தசாமி
பத்துவயது ஆகுமிந்த வாமிதானே

இன்றைக்கு 800 ஆண்டுகட்கு முன்னாலே கருவூர் சித்தர் எழுதிய இந்த வரிகள் அப்படியே பொருந்துகின்றனவே!

அதுமட்டுமா! நெமிலியென்னும் அந்த சிற்றூரிலே வந்து "பாலாதிரிபுர சுந்தரி பீடம்" எங்கே என்று கேட்டால் கிடைக்கும் பதில் என்ன தெரியுமா?

"அதுங்களா! நம்ம ஐயர் வீட்லேதான் இருக்கு! அவங்க வீட்லேதான் ஸ்ரீபாலா கொலு விருக்கிறாள்" என்றுதான் கூறுவார்கள்.

கருவூர் சித்தர் பாடலும் அதனையே அல்லவா வலியுறுத்துகிறது. ஆம்! ஆலயமல்ல! வீடு! வீடு! வீடுதான்!!!

"வாலையவள் இருந்த வீடு! சோதியந்த நடுவீடு" என்று வீடு என்றுதான் அத்தனை செய்யுட்களிலும் பேசுகிறார் கருவூர் சித்தர்.

அது மட்டுமா! நவராத்திரியிலேதான் எத்தனை கலைஞர்கள்! எவ்வளவு புதுப் புதுப் பாடல்கள் அன்னை பாலாவுக்கு! அவற்றை டாக்டர் சீர்காழி எஸ். கோவிந்த ராஜன், திருமதி வாணி ஜெயராம், திரு. கே. வீரமணி ராதா, மெல்லிசை மன்னர் எம்.எஸ். விஸ்வநாதன், டாக்டர் சீர்காழி சிவசிதம்பரம் போன்றவர்கள் மெய்யுருகப் பாடிய அந்தப் பரவச நிலைதான் என்ன!

அதேபோல் அன்னையைப் பற்றி வானதியார் வெளியிட்ட நூலின் பெயர் **"அன்னை பாலாவின் அற்புதங்கள்"**. மேலே சொன்ன அத்தனையையும் கருவூர் சித்தர் தமது செய்யுளிலே கூறுகிறார்.

சூட்சமிவள் வாசமது நிலைத்த வீடு
சொல்லுதற்கு எங்குமாய் நிறைந்த வீடு

தேசமதில் போய்விளங்கு மிந்த வீடு
சித்தாந்த சித்தரவர்க் கேகும் வீடு
ஓசைமணிப் பூரமதில் உதிக்கும் வீடு
ஓகோகோ அதிசயங்கள் உள்ள வீடு
ஆசுகவி மதுரமது பொழியும் வீடு
அவனவளும் கூடி விளையாடும் வீடே

ஆஹா! என்ன இந்த வைர வரிகள்! அதிசயங்கள் உள்ள வீடு! ஆம்! அந்த அதிசயங்கள் தான் இந்தப் புத்தகத்திலும், வானதியின் வெளியீடுகளான "திரிபுர சுந்தரி திருவிளையாடல்" "அன்னை பாலா அற்புதங்கள்" என்ற புத்தகங்களில் வந்துள்ளன.

தேசமதில் போய் விளங்கும் இந்த வீடு

இந்த வரியில்தான் எத்தனை அற்புதம்.

"ஸ்ரீபாலா திரிபுரசுந்தரிபீடம், 22, சத்திரத் தெரு, நெமிலி - 631 051, வட ஆற்காடு அம்பேத்கார் மாவட்டம்" என்ற இந்த வீட்டிற்குத்தான் எத்தனை தேசங்களில் இருந்து கடிதங்கள்! டென்மார்க், அமெரிக்கா, மலேஷியா, லண்டன் போன்ற ஊர்களிலிருந்து அன்னை பாலாவின் பிரசாதம் கேட்டு வரும் கடிதங்கள் பிரமிக்க வைக்கின்றன.

"டென்மார்க்கில்" உள்ள "பில்லண்ட்" என்ற நகரின் நூலகத்தில் அன்னை பாலாவைப் பற்றிய வானதியின் "திரிபுரசுந்தரி திருவிளையாடல்" ஆன்மீகச் சேவை புரிந்து வருகிறது.

அதேபோல லண்டன் நகர நூலகத்தில் வானதியின் "அன்னை பாலா அற்புதங்கள்" என்ற நூலைப் படித்துவிட்டு எத்தனை அன்பர்கள் அன்னையின் பிரசாதத்தை வேண்டுகின்றனர். கருவூர் சித்தரின் இந்த பாடல்களைப் பார்க்கும்போது

நடமாடும் சித்தராக விளங்கிய திருமுருக கிருபானந்த வாரியார் ஸ்வாமிகளின் "விட்டகுறை - தொட்ட குறை" என்று கூறிய வாக்கின் உண்மை விளங்குகிறது. ஆம்! அன்று கருவூர்சித்தர் எழுதிய பாடல்கள் இன்று உண்மையாகி விட்டன. "விட்டகுறை - தொட்டகுறை" இன்றும் தொடர்கிறது.

அது மட்டுமா? அவர் பாடலிலே வரும் "ஓசை மணிப்பூரமதில் உதிக்கும் வீடு" என்ற வரிகள் கண்டு எனக்கு மகா சந்தோஷம். ஆம்! என் பெயர் எழில்மணி அல்லவா! எனவேதான் இசைமணியும் (சீர்காழி), வீரமணியும் எனக்கு உடன்பிறவா சோதரர்களாகி எனது பாடல்களைப் பாட பாலாவின் அருள் கிடைத்தது.

"ஆசுகவி மதுரமது பொழியும் வீடு" இது ஒரு வரி! ஆம்! ஆசு கவி பொழிந்தது. அற்புதம் விளைந்தது. இந்த எளிய கவிஞனுக்கும் "ஸ்ரீபாலாவின் அங்கீகாரம்" கிடைத்தது. அவளின் பாடல்கள் மலர்ந்தன. இந்த எளியவன் எழுதிய "ஸ்ரீபாலாவின் கவசத்தையும், ஸ்ரீ பாலாவின் பாடல்களையும்" இசைமணி டாக்டர் சீர்காழி எஸ். கோவிந்தராஜன் அவர்கள் கலை மாமணி டி.ஆர். பாப்பா அவர்களின் இசை யமைப்பிலே பாடி "திரிபுர சுந்தரி தேனிசை" என்ற தலைப்பிலே சங்கீதா கேஸட் நிறுவனம் மூலம் ஸ்ரீபாலா சன்னதியில் வெளியிட்டார்.

"வெள்ளிக்கிழமையிலே - பாலாவின் கோயிலிலே வேதங்கள் ஒலிக்குதடி - நம் வேண்டுதல் பலிக்குதடி" என்ற பாடலை கலைமாமணி கே. வீர மணி அவர்கள் சோமுவுடன் சேர்ந்து இசையமைத்து வேலூர் சாந்தி ஆடியோ கேஸட் மூலம் "அம்மன் அருள் மாலை" என்ற கேஸட்டாக ஸ்ரீபாலா

சன்னிதியில் வெளியிட்டார். அதிலேயே "ஆற்றங்கரையில் கோயில் கொண்டாள் பாலா திரிபுர சுந்தரி - அழகுடன் நெமிலி நகரினில் வந்தாள் பாலா திரிபுர சுந்தரி" என்ற பாடலை கவிஞர் உளுந்தூர்ப்பேட்டை சண்முகம் அவர்களின் மகளான வித்யாவைப் பாட வைத்து வெளியிட்டார். மேலும் அவரே

புரட்டாசி மாதத்திலே – புகழ் நவராத்திரியில்
திரிபுர சுந்தரி கொலுவிருப்பாளே

என்ற பாடலை ராதா - வித்யாவுடன் இணைந்து பாடி சங்கீதா கேஸட்டான "பன்னிருமாத தெய்வீகப் பாடல்கள்" என்ற கேஸட்டிலே வெளிவரச் செய்தார்.

அருள்மிகும் தேவி அன்னை பாலா திரிபுர சுந்தரி
சரணம் – இருள்தனை நீக்கும் தாயே பாலா
திரிபுர சுந்தரி சரணம்

என்ற பாடலை திருமதி வாணி ஜெயராம் பாட எச்.எம்.வி. நிறுவனம் "அம்மன் ஸ்தல யாத்திரை" என்ற கேஸட்டாக வெளியிட்டது. நெமிலி ஸ்ரீபாலாவைப் பற்றி திரைப்படப் பின்னணிப் பாடகி கே. சித்ராவின் மூலம், பிரபல இசையமைப்பாளர் கே.வி. மகாதேவனின் உதவியாளர் திரு. கே. புகழேந்தி அவர்கள் இசையமைப்பில் "நவராத்திரி தேனிசை" என்ற தலைப்பில் எனது ஒன்பது பாடல்களை எச்.எம்.வி. நிறுவனம் கேஸட்டாக ஸ்ரீபாலா சன்னிதியில் வெளியிட்டது. பிரபல இசையமைப்பாளர் திரு. சந்திரபோஸ் அவர்கள் "திரிபுர சுந்தரி - நீ - எம்மை ஆதரி பாலா" என்ற பாடலுக்கு இசையமைத்து, செல்வி வனிதாவைப் பாட வைத்து, "அம்மன் மணிமாலை" என்ற தலைப்பிலே எச்.எம்.வி. கேஸட்டாக வெளியிட்டார்.

"ஆசுகவி மதுரமது பொழியும் வீடு" என்ற கருவூர் சித்தரின் வரிகள்தான் எத்தனை தீர்க்கதரிசன மானது, இதுதான் விட்டகுறை - தொட்டகுறையோ! மற்றுமொரு சம்பவம். ஸ்ரீபாலாவின் சன்னிதியில் இரண்டு கதவுகள் செய்யச்சொல்லி நெமிலியில் உள்ள தங்கவேல் ஆச்சாரி என்னும் பெரியவரிடம் கேட்டுக் கொண்டேன். அவர் எங்கள் குடும்ப நண்பரும்கூட. ஒவ்வொரு கதவுக்கும் நட்சத்திர வடிவில் ஒன்பது ஒன்பது வடிவங்கள் அமைக்கச் சொன்னேன். அதில் சின்னச் சின்ன வெண்கல மணிகளை மாட்டச் சொன்னேன். அந்தக் கதவு மூடியிருந்தாலும் அந்த நட்சத்திரப் பகுதியில் பார்த்தால் அம்பாளை தரிசிக்கலாம் என்ற எண்ணம்தான். பலகைகள் வாங்கித்தந்து விட்டு நான் அரக்கோணம் சென்று விட்டேன். மாலை திரும்பி வந்து பார்க்கும்போது எனக்கு 'பகீர்' என்றது.

ஆம்! அவர் "நட்சத்திரம்" அமைப்பதற்குப் பதில் "முக்கோண வடிவமாக" அமைத்து அதில் சின்ன சின்ன வெண்கல மணிகளைத் தொங்க விட்டிருந்தார். கதவுகள் திறக்கும்போதும், மூடும் போதும் ''மணியோசை'' கேட்கும் வண்ணம் அமைந்திருந்தது.

"என்னங்க இது! நான் நட்சத்திர வடிவம் அமைத்து அதில் அல்லவா மணிகளை மாட்டச் சொன்னேன். நீங்கள் இப்படி முக்கோண வடிவம் அமைத்து விட்டீர்களே" என வருத்தப் பட்டேன். ஏன்! ஆத்திரமும் பட்டேன்! இன்னமும் ஒருபடி மேலே போய் அதற்குத் தரவேண்டிய கூலியும் தரமாட்டேன் என்று கத்தினேன்.

அதற்கு அவர் பொறுமையாக "நான் என்ன பண்றதுங்க! ஒரு நட்சத்திரம் பண்ணும்போது அதன்

முனை உடைந்து விட்டது. மற்றொரு நட்சத்திரம் பண்ணும்போதும் அதேபோல் முனை உடைந்து விட்டது. அதனை அப்படியே முக்கோணமாக மாற்றி விட்டேன். இதுகூட நல்லாத்தானே இருக்கு என்றாரே பார்க்கலாம். இனிமேல் என்ன செய்வது? பணம் கொடுத்தனுப்பி விட்டேன். அதன்பின் இரண்டு ஆண்டுகள் கழித்து இந்த கருவூர் சித்தர் பாடல்கள் எனக்குக் கிடைக்கப்பெற்று அதில் உள்ள **13**-வது பாடலின் இறுதி வரியைக் காணும்போது மெய்சிலிர்த்து விட்டது.

ஆம்!

**கோணாத முக்கோணக் குறியைப் பாரு**
**கூசாத கண் கூசும் கூசும் தானே**

எப்படியிருக்கிறது! நட்சத்திரக் குறியைப் புறக் கணித்து பாலா, "முக்கோணக் குறியை" கதவில் வரச் செய்துள்ளாள்! ஏனெனில் அது கருவூர் சித்தரின் வாக்கல்லவா!

நட்சத்திரக்குறி உடைந்ததற்கும், முக்கோணக் குறி அமைந்ததற்கும் அருமை நண்பர் தங்கவேல் ஆச்சாரி காரணமல்ல! அந்த பாலாவும், கருவூர் சித்தரும்தான் காரணம் என்று அறிய பிரமித்தேன். அது மட்டுமல்ல; கொங்கணச் சித்தர்

**விந்தையாய் வாலையைப் பூசிக்க, முன்னாளில்**
**விட்டகுறை வேணும் வாலைப் பெண்ணே**

என்கிறார். எனவே **"விட்டகுறை – தொட்டகுறை"** என்ற வாரியார் ஸ்வாமிகளின் வாக்குதான் எத்தனை முழுமையாகப் பலித்தது. கருவூர்ச் சித்தர் இன்றும் ஸ்ரீபாலாவின் சன்னிதியிலே வாழ்ந்து கொண் டிருக்கிறார். "விட்டகுறை - தொட்ட குறையை"த் தொடர வைத்திருக்கிறார். அன்னை பாலாவின் லீலா விநோதங்களைத்தான் என்னவென்பது!

# ஸ்ரீ பாலாவின் நவராத்திரி வைபவம்

அருள்மழை பொழிகின்ற அன்னை பாலாவுக்கு நவராத்திரி காலம் தான் ''பிரம்மோற்சவம்'' என்று கூறலாம். அழகான நெமிலி, நவராத்திரிக்காக தன்னை அலங்காரம் செய்து கொள்ளும்.

ஒன்பது நாட்களும் நெமிலி ஸ்ரீபாலாவின் சன்னிதியில் விழாக்கோலம்தான். திருவையாற்றில் தியாகராஜ ஆராதனையாக இசை மேதைகள் ''இசையஞ்சலி'' செலுத்துவதுபோல் நெமிலியில் ''திரிபுர சுந்தரி ஆராதனையில்'' இசை மேதைகள் ''இசையஞ்சலி'' செலுத்துகின்றனர்.

அமரர் டாக்டர் சீர்காழி எஸ். கோவிந்த ராஜன் ஆரம்பித்த நவராத்திரி இன்னிசைத் திருவிழா சீரும் சிறப்புமாக நடைபெற்று வருகிறது.

நவராத்திரியில் பிரதமைத் திதியில் கலசஸ்தாபனம் செய்வது கண் கொள்ளாக் காட்சி. தினந்தோறும் காலையில் மஹன்னியாச பூர்வக ருத்ராபிஷேகம், சூர்ய நமஸ்காரம், தேவி பாகவதம், சப்த சதி பாராயணம், சஹஸ்ரநாம அர்ச்சனைகள் ஆகியவை நடைபெறுகின்றன. மாலையில் அம்பாளுக்கு குங்குமார்ச்சனையும் மஹா தீபாராதனையும் நடைபெறுகின்றன. நவமி திதியில் ஹவனம் முதலான கைங்கர்யங்கள் நடைபெற்று ''மஹா சண்டி ஹோமம்'' நிறைவுபெறும் காட்சி மனதை விட்டகலாத காட்சியாகும். பிரதமைத்

திதியில் அன்னை பாலாவை "கலசத்திலே" ஆவாஹனம் செய்து அன்னையின் மந்தாசத்தினிலே சுமங்கலிகள் "கௌரி கல்யாணம்" பாடி அமர வைப்பார்கள்.

அன்னை முதல் மூன்று நாட்கள் மலை மகளாகவும், அடுத்த மூன்று நாட்கள் அலை மகளாகவும், கடைசி மூன்று நாட்கள் கலை மகளாகவும் காட்சியளிக்கிறாள்.

நவமி அந்தியத்திலே "மஹா சண்டிஹோமம்" வளர்க்கப்படுகிறது.

கலசத்தின் இடுப்பிலே "தர்ப்பையால்" ஆன கயிற்றினை இணைத்து அதனை ஹோம குண்டத்தை சுற்றிக் கட்டி விடுவதும், உரிய மந்திரங்கள் கூறி "பூரண ஆஹுதி" செய்வதும், "பூரண ஆஹுதி" முடிந்தவுடன் "பலி"யாக பெரிய பூசணிக்காயை பந்தம் செய்து மகிஷாசூரசம்ஹாரம் செய்வதும், அந்த பூசணிக்காயை பந்தம் செய்யும்போது குங்குமத்தால் தடவி "குருதி" போன்று அதனை கையில் எடுத்துக்கொண்டு கலசத்தில் ஆவாஹனம் ஆகியுள்ள அம்பிகையின் இடுப்பிலே சொட்டு சொட்டாக விட்டு அசுரனை அழித்ததை உறுதிப்படுத்தியும் நடக்கின்ற அத்தனை காட்சிகளும் அற்புதம்! அற்புதம்!!

அதன்பின் அந்த தர்ப்பையால் ஆன கயிற்றை விடுவித்து விட்டு பந்தம் செய்யப்பட்டு குங்குமத்தால் தடவப்பட்ட பூசணித்துண்டுகளை ஹோம குண்டத்தின்மீது வரிசையாக அடுக்கி வைத்துவிட்டு, "அயிகிரிநந்தினி" என்னும் மகிஷாசுர மர்த்தனி ஸ்தோத்திரத்தை மனம் குளிரப் பாடிக் கொண்டு அந்த ஹோம குண்டத்தை பக்தர்கள் அனைவரும் சுற்றி வரும்போது...

ஓ! பிறவிப்பயன் எடுத்த பேறல்லவா கிடைத்து விடுகிறது.

சந்தனப்புகையும், சாம்பிராணிப் புகையும் சுற்றி வந்தவர்கள் கண்களிலே பரவி, கண்ணீர் வழியும்போது, அந்த கண்ணீரின் வழியாக நமது கஷ்ட மெல்லாம் கரைவதல்லவா தெரிகிறது.

அருள்மிகும் தேவி அன்னை பாலாவே நடத்தும் அந்த மஹா சண்டி ஹோமக் காட்சியைக் காண்பதற்கும், அந்த ஹோம குண்டத்தைச் சுற்றி வருவதற்கும்தான் எத்தனை தவம் செய்திருக்க வேண்டும்?

அன்னை பாலாவே அந்த ஹோமத்தை அருகிருந்து நடத்துகிறாள் என்பது சத்தியமான வார்த்தை.

ஆம்! முன்பு அன்னை பாலாவை ஆற்றில் கண்டெடுத்து தனது வீட்டிலே கொலுவிருக்கச் செய்த அமரர் டி.கே. சுப்ரமணிய ஐயர் அவர்கள் "என்னம்மா! கற்பூரம் போதுமா? குங்குமம் சரிதானே! ஆரம்பிக்கலாமா" என்றெல்லாம் நேருக்கு நேராக இருப்பது போலவே பேசிப் பேசி யாகத்தை நடத்துவாராம்.

அம்பிகை எந்த வடிவமாகவாவது யார் கண்ணிலாவது தெரிவது உண்டு.

ஒரு ஆண்டு நடந்த சண்டிஹோமத்தில் இந்த எளியவனுக்கும் நேர்ந்த ஓர் இனிய அனுபவம்.

சண்டிஹோமம் சிறப்பாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. இன்னும் இருபது நிமிட நேரத்தில்

''பூரண ஆஹுதி'' நடைபெற்று ''மகிஷாசூர சம்ஹாரம்'' நடக்கவுள்ளது.

ஹோமகுண்டத்தின் எதிரே உள்ள சுவற்றின் ஓரத்திலே "பலி"க்காக பெரிய பூசணிக்காய் ஒன்று தயார் நிலையில் பந்தம் செய்யப்படவுள்ளது. அப்போது எனது சித்தப்பா பையன் பாலகிருஷ்ணன் என்று அழைக்கப்படும் சந்துரு தனது கையில் வெட்டுக் கத்தியுடன் பூசணிக்காய் அருகே சென்று உட்கார்ந்து கொண்டான். எனக்கு கோபம், "இன்னும் இருபது நிமிடம் உள்ளதே! இப்போதே போய் ஏன் அவன் அங்கு உட்கார வேண்டும்" என்று நினைத்து "பிறகு உட்காரலாமே!" என்று கத்தினேன். ஆனால் அது அவன் காதில் விழுந்ததாகவே தெரியவில்லை. அவன் பாட்டுக்கு, "எப்போது அதனை பந்தம் செய்யும் வாய்ப்பு வரும்'' என்று உட்கார்ந்து கொண்டிருந்தான். இரண்டு மூன்று தடவை கூறியும் அவன் திரும்பாததால் நான் வெறுத்துப்போய் திரும்பிப் பார்த்தேன். என்ன ஆச்சரியம்! எனது சித்தப்பா மகனான அவன் இந்தப்பக்கம் பதவிசாக உட்கார்ந்து கொண்டிருக்கிறான்!

என்ன ஆச்சர்யம் இது! அங்கே அவன் உட்கார்ந்ததைப் பார்த்து நான் கத்தியதென்ன, இப்போது என் பின்னாலே இங்கே அவனே உட்கார்ந் திருக்கும் விந்தையென்ன! நான் பிரமித்து விட்டேன்! அப்போது நான் அங்கே அவனைப் பார்த்தது எப்படி? இவன் என்ன டபிள்ரோல் செய்கிறானா? நான் வியப்புடன் முன்பு நான் கண்ட இடத்தை - பூசணிக்காய் அருகில் - ஆர்வத்தோடு பார்த்தால்...

ஓ... எழுதிடவே கை நடுங்குகிறது. ஹோமத்தில் எழுந்த புகையோடு கூட மெல்ல ஓர் உருவம் கரைந்து

போகிறது. அங்கு இப்போது யாருமில்லை... என் கண்ணெதிரிலேயே கரைந்த அந்த உருவம் யார்? ஆம்! அவள்தான் அன்னை பாலா!

நவராத்திரி கொலு காணும் ஸ்தல யாத்திரை

என்ற ஒரு பாடலின் வரும் வரிகள்.

அன்னை பாலா கொலுவிருக்கும்
அழகு நெமிலி செல்வோமே
அவளே நடத்தும் சண்டிஹோமக்
காட்சிதன்னைக் காண்போமே

ஆம்! அவளே நடத்தும் மஹாசண்டி ஹோமம். சண்டிஹோமம் நடக்கும் அந்த மண்டபத்திலே கூட்டத்தோடு கூட்டமாய் அன்னை அமர்ந்திருக்கிறாள் என்று எண்ணும்போதே என்னவோ செய்கிறது! இது எப்படிப்பட்ட பேறு.

அருள்மிகும் நெமிலி அன்னை பாலா திரிபுர சுந்தரியின் அருள் நமக்கு கிடைத்து விட்டால் வேறு என்ன வேண்டும்.

மறுநாள் விஜயதசமியாக தனது வெற்றியைத் தாய் கொண்டாடுகிறாள். நவராத்திரிக்கு வந்து, வாழ்வில் ஒரு தடவையாவது அந்த மஹா சண்டி ஹோமத்தையும் மறுநாள் விஜயதசமி விழாவையும் கண்டுவிட எத்தனையோ அன்பர்கள் தவித்த வண்ணம் இருக்கின்றனர். அவசியம் ஒருநாள் அவள் அழைப்பாள் - தரிசனம் பெறலாம்!

## மாரியைப் பொழியும் மாரியும் அவளே
## காரியம் நடத்திடும் காளியும் அவளே

---

நெமிலி ஸ்ரீ பாலா திரிபுர சுந்தரி பீடத்தில் ஒவ்வொரு நவராத்திரியிலும் கலைஞர்களைப் பாராட்டி பாராட்டு மடல் வழங்குவது வழக்கம்.

அமரர் டாக்டர் சீர்காழி எஸ். கோவிந்த ராஜன், கலைமாமணி குன்னக்குடி வைத்யநாதன், வீணை பிச்சுமணி அண்ணா, இசைப் பேரரசி வாணி ஜெயராம், பாடகர் மலேஷியா வாசுதேவன், கலைமாமணி கே. வீரமணி, சங்கீத கலாநிதி மஹாராஜ புரம் சந்தானம், இளைய இசைமணி டாக்டர் சீர்காழி சிவ சிதம்பரம், பின்னணிப்பாடகி திருமதி எம்.எஸ். ராஜேஸ்வரி, வில்லிசைக் கலைஞர் திரு. சுப்பு ஆறுமுகம் போன்ற பல இசை அன்பர்கள் அன்னை பாலாவின் சன்னிதியில் பாராட்டு மடல் பெற்றவர்கள்.

1993-ம் ஆண்டில் நடந்த நவராத்திரி விழாவில் திரைப்படப் பின்னணிப் பாடகர் திரு. எஸ்.பி. பாலசுப்ரமண்யத்திற்கு அன்னை பாலா திரிபுர சுந்தரி பீடத்தின் சார்பாக ''இசைக்கடல்'' பட்டத்தை நெமிலியில் அன்னையின் சன்னிதியில் டைரக்டர் கே. சங்கர் அவர்களும், மெல்லிசை மன்னர் எம்.எஸ். விஸ்வநாதன் அவர்களும் வழங்கினார்கள்.

முதன்முதலில் மெல்லிசை மன்னர் எம்.எஸ். விஸ்வநாதன் அவர்கள் நெமிலிக்கு வந்தபோது ஒரு விநோதம் நிகழ்ந்தது. "பாலா திரிபுர சுந்தரியின் லீலா

விநோதங்கள்" என்ற தலைப்புக்கு பொருத்தமான லீலா விநோதம்தான்.

அன்னையின் பெருமைகளைக் கேள்விப் பட்டு அம்பாளின் பூஜையிலே கலந்து கொள்வதற்காக வும் இசைச்சேவை புரிவதற்காகவும் சென்னையி லிருந்து எச்.எம்.வி. மேனேஜர் திரு. முத்துக்குமார் அவர்களுடன் காரில் புறப்பட்டார். கிளம்பும்போது மாலை 5 மணி.

கார் சுங்குவார் சத்திரத்தை நெருங்கும்போது பலத்த இடியுடன் அடைமழை. பளீர் பளீரென்று மின்னல். அந்த மின்னலின் கண்ணைப் பறிக்கும் ஒளி, காரின் முன் கண்ணாடியில் பட்டு உள்ளே இருந்த எம்.எஸ்.வி. அவர்களையும் முத்துக்குமார் அவர்களை யும் அதிரவைத்தது. காரை ஒரு ஓரமாக அப்படியே நிறுத்தி விட்டனர். அரைமணி நேரம் மழையும் இடியும் மின்னலும் ஓயவே இல்லை.

திரு. முத்துக்குமார், எம்.எஸ்.வி. அவர்களிடம் "சார்! இடி மின்னல் பயங்கரமாக இருக்கிறது. நெமிலியிலும் பயங்கர மழையாகவே இருக்கும் என நினைக்கிறேன். இசை நிகழ்ச்சி ஏதும் நடத்த இயலாது. எனவே திரும்பிச் சென்று விட்டு இன்னொரு நாள் வரலாம் சார்" என்றார் மெதுவாக. அவர் கூறியதும் சரிதான். அன்னையிடம் எவ்வித உதவியும் எதிர் பார்க்காமல் அருள் ஒன்றையே நாடி - ஆயிரக் கணக்கில் இசை நிகழ்ச்சிக்கு கட்டணம் வாங்கும் அந்த இசைமேதை வந்து கொண்டிருக்கிறார். எனவே இன்றில்லாவிடில் மற்றொரு நாள் வைத்துக் கொள்ளலாம், ஆடிட்டோரியத்திலோ, அன்றி தியேட்டரிலோ முன்னதாக டிக்கெட் விற்பனை செய்து அதனால் ரசிகர்கள் வந்திருப்பின் அவர்களை

ஏமாற்றமடையச் செய்யக்கூடாதே என எம்.எஸ்.வி. அவர்கள் வரவேண்டியதுதான். அவரது ஆர்க் கெஸ்ட்ரா முன்னால் சென்று காத்துக் கொண்டிருப் பினும் வரவேண்டியதுதான்.

அன்னை பாலாவின் உற்சவத்திற்காக பணம் ஏதும் வசூல் செய்து அதன்மூலம் அவர் ஏதும் பெற்று - அப்படி நடக்கும் கோயில் இசைக் கச்சேரியாக இருந்தாலும் ஒருவேளை தவிர்க்க இயலாதது. கட்டாயம் செல்லத்தான் வேண்டும்.

ஆனால் அப்படி ஏதும் இல்லாமல் - "அம்பாள் தரிசனம் - இசைக் காணிக்கை" என தியாகராஜ ஆராதனைக்கு செல்வதுபோல் தமது ஆர்மோனியத்துடன் தான் மட்டும் சன்னிதியில் பாடவும், திரிபுரசுந்தரி ஆராதனைக்கும், அவர் வந்து கொண்டிருக்கிறார். எனவே அவர் திரும்பிச் சென்றால் ஏதும் கேட்க இயலாது. அவர் மீதும் தப்பில்லை. இடி மழையில் யார்தான் என்ன செய்ய முடியும். அவர் திரும்பிச் செல்வது ஒத்துக்கொள்ளக் கூடியதே. ஆனால் எம்.எஸ்.வி. அவர்கள் என்ன கூறினார் தெரியுமா!

"முத்துக்குமார் சார்! எங்கேயும் அம்பாளை தரிசனம் செய்யக் கிளம்பி, இதுவரை நான் திரும்பிப் போனதே இல்லை. நான் போகவும் மாட்டேன்! நான் இப்போதுதான் முதல் தடவையாக அன்னை பாலாவை தரிசிக்கவும், அவள் அருள் பெறவும், என்னால் முடிந்த பாடல்களைப் பாடவும் நெமிலிக்குச் செல்கிறேன். கடுமையான இடி மழையால் அங்கு எல்லோரும் கலைந்து கூடச் சென்று விட்டிருக்கலாம். ஆனால் நெமிலி பாலா திரிபுர சுந்தரி புன்னகையோடு என் பாடலைக் கேட்டு எனக்கு

தரிசனம் தரமாட்டாளா என்ன? மேலும் பாலா திரிபுர சுந்தரி குறும்புக்காரப் பெண் தெய்வம் எனக் கேள்விப்பட்டுள்ளேன். "இடி மழையில் இவன் திரும்பி விடுகிறானோ பார்க்கலாம்'' என்றுகூட அவள் என்னை சோதனை செய்யலாம். லீலை புரியலாம்! நானா விடுவேன்! நெமிலிக்கு போயே தீர வேண்டும்'' என்று உறுதியாகக் கூறி விட்டார். மெல்ல மெல்ல பயணத்தைத் தொடர்ந்து மாலை 6 மணிக்கு நெமிலிக்கு வர வேண்டியவர்கள், இரவு எட்டு மணிக்கு நெமிலிக்கு வந்தார்கள். நெமிலியிலே அவர்களுக்கு ஓர் ஆச்சரியம் காத்துக் கொண்டிருந்தது.

ஆம்! நெமிலியிலே ஒரு சொட்டு மழையில்லை. திரளான கூட்டம். ஸ்ரீபாலாவின் சன்னிதியிலே அப்போதுதான் அபிஷேகம் யாவும் தொடங்குகிறது. எம்.எஸ்.வி.க்கு கண் கலங்கி விட்டது. விழிநீரைத் துடைத்துக்கொண்டே "பார்த்தீர்களா! பாலாவின் லீலையைப் பார்த்தீர்களா? இங்கு ஒரு சொட்டு மழைகூட இல்லை. புன்னகையுடன் அம்பாள் தரிசனம் கிடைத்துவிட்டது'' என குதூகலத்துடன் கூறினார். திரண்ட கூட்டத்தின ரிடையே தமது ஆர்மோனியப் பெட்டியை வைத்துக் கொண்டு தமது கம்பீரமான குரலில்,

"பாலா திரிபுர சுந்தரி - எம்மை ஆதரி" என கம்பீரமாகப் பாடத் துவங்கி விட்டார். அத்தனை பேருக்கும் ஆனந்தம். அவருக்கு நடைபெற்ற பாராட்டு விழாவில் அவர், "எந்தவித பிரதிபலனும் எதிர் பாராமல் என்னை வரவழைத்து - எனக்கு தரிசனம் செய்வித்து - என்னை மகிழ்ச்சியிலே ஆழ்த்திய ஸ்ரீ பாலா திரிபுர சுந்தரி பீடத்தைச் சேர்ந்தவர்கட்கு எப்படி நன்றி சொல்வது? எனக்கு கிடைத்த பெரும்

பேறு இது! அந்தக் காலத்திலே கலைஞர்களை ராஜா கூப்பிட்டுப் பாராட்டுவாங்க! இந்தக் காலத்திலே ராஜாவுமில்லே - மந்திரியுமில்லே! இப்படிப்பட்ட உண்மையான உள்ளங்கள் தர்ற பாராட்டைவிட எனக்கு எந்தவித அவார்டும் கூட பெரிசில்லே" என உணர்ச்சி பொங்கப் பேசினார்.

"அருள் மிகும் தேவி அன்னை பாலா திரிபுர சுந்தரி சரணம்" என்ற பாடலிலே,

மாரியைப் பொழியும் மாரியும் நீயே
அன்புடன் வருவாய் அம்மா
காரியம் நடத்திடும் காளியும் நீயே
இன்பம் தருவாய் அம்மா

என்ற வரிகள் வரும்.

சுங்குவார் சத்திரத்திலே மாரியைப் பொழியும் மாரியாக பாலா விளங்கினாள்.

நெமிலியிலே காரியம் நடத்திடும் காளியாக மாறி மழையை நிறுத்தி வைத்து இன்னிசையை நடத்தினாள். அந்த பாலாவை எண்ணும் போதெல்லாம் மெல்லிசை மன்னர் எம்.எஸ். விஸ்வநாதன் உணர்ச்சி வசப்பட்டுப் போகிறார்.

நெமிலி பாலா திரிபுர சுந்தரியின் லீலா விநோதங்கள் இப்படி ஆயிரக்கணக்கிலே தினமும் நடைபெற்றுத்தான் வருகின்றன.

எழுத்திலே அடக்கி விடமுடியுமா அவளது லீலா விநோதங்களை?

முடிந்தவரை கூறும் சிறிய முயற்சிதான் இது!

# பாலாவும் வானதியும்

அபிராமி அந்தாதியில் 54-வது பாடல். திரிபுரையின் பாதங்களைப் பேசும் தித்திக்கும் பாடல். இல்லாமை சொல்லி ஒருவரிடம் சென்று யாசகம் கேட்டு இழிவுபடக்கூடிய நிலை உங்களுக்கு வரக்கூடா தென்றால் திரிபுரையின் திருப்பாதங்களைச் சேர்வது தான் ஒரேவழி.

நீடுதவம் கல்லாத கயவர்களிடம் ஒரு காலத்திலும் செல்லாமலிருக்க வேண்டுமென்றால் திரிபுர சுந்தரியின் திருப்பாதங்களைச் சேர்வதுதான் ஒரே வழி.

இதோ அந்தப் பாடல்

இல்லாமை சொல்லி ஒருவர்தம்பால் சென்று இழிவுபட்டு
நில்லாமை நெஞ்சில் நினைகுவிரேல் நித்தம் நீடுதவம்
கல்லாமை கற்ற கயவர்தம்பால் ஒரு காலத்திலும்
செல்லாமை வைத்த திரிபுரைபாதங்கள் சேர்மின்களே

அப்படியானால் "இல்லாமை என்பது திரிபுரையின் பக்தர்க்கு இருக்கும். ஆனால் அதனைச் சொல்லி இழிவுபட மட்டும் வைக்க மாட்டாள்" என்று கூட பொருள்படுகிறதல்லவா!

"இல்லாமையை வழங்கவும் ஓர் இறைவியா" என்று கூடக் கேட்கத் தோன்றுகிறதல்லவா!

ஆம்! "இல்லாமை" என்பது அவள் தந்த வரம்! "ஏழ்மை" என்பது அவள் தந்த அணிகலன்! "இது என்ன வாதம்" என்று கூடக் கேட்கலாம். ஆயிரம்

தடவை சொல்லுவேன்! "இல்லாமை என்பது அவள் தந்த வரம் - ஏழ்மை என்பது அவள் தந்த அணிகலன்". ஏன் தெரியுமா? செல்வத்தை அள்ளி அள்ளிக் கொடுத்தால் நாம் எப்படிச் சீரழிந்து விடுவோமோ? பணத்தை அள்ளி அள்ளிக் கொடுத்தால் அது நம்மை எந்தப் பாதாளத்தில் தள்ளி விடுமோ?" எனவேதான் திரிபுர சுந்தரி "ஏழ்மை" என்னும் அரணை அமைத்தாள் - "இல்லாமை" என்னும் அகழியை அமைத்தாள்.

ஆனால் உனக்கு தேவை என்று வரும்போது உன்னை அவள் "இல்லாமை" என்னும் அகழியில் தள்ளிவிட்டு விடுவாளா என்ன? கல்லாமை கற்ற கயவரிடம் உன்னைக் கைகட்டி நிற்க வைப்பாளா என்ன?

அவளைக் கற்றவரை - உன்னை வந்து சுற்ற வைப்பாள்! தேவையான நேரத்தில் தேவையான பொருளை தேவி திரிபுர சுந்தரி தந்து விடுவாள்!

ஆம்! அப்படித் தந்து விட்ட ஒரு நிகழ்ச்சியை இப்போது பார்க்கலாம்.

அன்னை பாலாவுக்கு அழகான கோபுரம் கட்ட வேண்டுமென்று எனக்கு ஆவல்.

ஆனால் அவளது அருள் வாக்கில் "எனக்குக் கோபுரம் வேண்டாம்! வருகிறவர்களை கோபுரம் ஆக்குவேன் உன்னையும் கோபுரம் ஆக்கட்டுமா?" எனக்கூறி அவள் புரிந்த திருவிளையாடல்களை "வானதியின்" "திரிபுர சுந்தரி திருவிளையாடல்" என்ற நூலிலே விவரமாக எழுதியுள்ளேன். "சரி, கோபுரம்தான் கட்டவேண்டாமென்றாள். அவள் அமர்ந்துள்ள கூடத்திற்கு எதிரேயுள்ள காலியிடத்தில்

ஒரு மண்டபம் அமைத்துவிட்டால் அன்பர்கள் அமரவும், உணவு உண்ணவும் பயன்படுமே" என நினைத்து மண்டபம் கட்ட முயற்சித்தோம். அன்பர்கள் துணையுடன் அஸ்திவாரம் போட்ட தோடு சரி! கட்டடம் நகர்ந்தால்தானே.

அருள் வாக்கு வரும்போது, "எதற்கு கட்டடம்? நான்தான் எளிமையாக இங்கு இருக்கிறேன் என்று கூறவில்லையா? ஏன் இந்த ஆடம்பரம்?" என்று கேட்டபோது "உனக்கு இல்லை இது! எங்கள் சௌகரியத்திற்காக கட்டிக்கொள்ள ஆசைப் பட்டோம். நவராத்திரியின்போது பந்தல் போட்டு விட்டு விழா நடக்கும்போது மழை வந்தால் போதும்! நிற்கவும் முடியவில்லை. அதனால்தான்" என எத்தனையோ சமாதானம் கூறியும் அன்னை மனம் இரங்கவில்லை. இரண்டு ஆண்டுகளாக அப்படியே கிடந்தது. அந்த சமயத்திலே இசைமணி சீர்காழி அவர்களும், இறைபணிச் செம்மல் வானதி திருநாவுக் கரசு அவர்களும் அன்னையை தரிசிக்க நெமிலிக்கு வந்தார்கள். நான் எழுதிய "தெய்வ அருட்பாடல்கள்" என்ற புத்தகத்தை வானதியார் பதிப்பித்து வெளியிட முதல் பிரதியை சீர்காழி பெற்றுக்கொண்டார். அடுத்த ஆண்டு நவராத்திரிக்கு வரும்போது நான் எழுதிய "திரிபுர சுந்தரி திருவிளையாடல்" என்ற நூலை வானதி பதிப்பகம் பிரசுரித்து அதனை வானதியார் வெளியிட முதல் பிரதியை சீர்காழியார் பெற்றுக் கொண்டார்.

அப்போதுதான் இசைமணி சீர்காழியார் அவர்கள் "எழில்மணி! வானதி திருநாவுக்கரசு அவர்கள் தமது வானதி பதிப்பகத்தை விரிவு படுத்த உள்ளார். தற்போது மொட்டை மாடியாக இருக்கும்

வானதி பதிப்பகத்தில் தளம்போட்டு மேலே புத்தகங்களை அடுக்கி வைக்க கட்டிடம் கட்ட உள்ளார். ஸ்ரீபாலாவை பிரார்த்தனை செய்து பிரசாதம் கொடுங்கள்" என்றார்! நானும் மிகவும் மகிழ்ச்சியுடன் பிரசாதம் தந்தேன்.

அதன்பின் சில நாட்கள் கழித்து வானதி திருநாவுக்கரசு அவர்களிடமிருந்து அழைப்பு வந்தது. ஆம்! வானதி பதிப்பகத்தை விரிவுபடுத்தி தளம் அமைத்து மேலே கட்டிடம் கட்ட நடக்கும் ஆரம்ப பூஜைக்கு வரச்சொல்லிய அழைப்பு அது.

சென்று பார்த்தால் இசைமணி சீர்காழியார் மற்றும் பல பிரமுகர்கள் இருந்தனர். நெமிலி ஸ்ரீ பாலா திரிபுர சுந்தரி அன்னையின் சார்பாக மஞ்சள் தடவிய செங்கல்லை என்னிடம் தந்து என்னையும் வைக்கச் சொன்னார்கள். அதேபோல் சீர்காழியாரும் வைத்தார் கள். அதன்பின் கிடுகிடுவென்று கட்டிடம் உயர்ந்தது. மிகவும் சிறப்பாக கட்டிடம் அமைந்து விட்டது. திரு. வானதி அவர்கள் என்னை சென்னைக்கு வரவழைத்து மிகவும் பூரிப்புடன் தாம் விரிவுபடுத்திய அந்த அழகான கட்டிடத்தைக் காண்பித்தார்கள். எனக்கு பரம சந்தோஷம். "அழகான அறைகள் - சிறப்பான கட்டிட அமைப்பு" வானதியின் பழைய கட்டிடத் தோற்றம் மாறி புதுப் பொலிவுடன் திகழ்ந்தது. நான் மகிழ்ச்சியுடன் அவரிடம் விடை பெற்றுக்கொண்டு பாண்டி பஜாரில் உள்ள மரங்களின் கீழே நின்று கொண்டு "சென்டிரல்" செல்லும் பஸ்ஸை எதிர் பார்த்து நின்றேன்! ஆம்! சென்டிரல் சென்று, அரக்கோணத்திற்கு ரயிலைப் பிடித்து நான் நெமிலிக்கு வர வேண்டும். அப்போது மணி மாலை ஆறு ஆகி விட்டிருந்தது. அந்த நேரத்தில் திடீரென்று எனக்கு

ஏனோ அழுகை வர ஆரம்பித்து விட்டது. ஆம்! நெமிலியில் உள்ள பாலா மண்டபம் கட்ட இயல வில்லையே என்ற வருத்தம்! வாய்விட்டு புலம்பினேன். "ஏனம்மா? ஏன் இப்படி ஒரு சிறிய மண்டபம் கட்டக்கூட சக்தியற்றவனாகச் செய்து விட்டாய்! இதோ வானதி அண்ணா வந்தார்! அருள் தந்தாய்! அழகான கட்டிடம் அமைந்தது. என்னை மட்டும் ஏன் சோதனை செய்கிறாய்? எப்படி இதனைக் கட்டுவது. யாரிடம் பிச்சை கேட்பது! பரவாயில்லை! "இல்லாமை சொல்லி" ஒருவரிடம் கேட்டு இழிவு படாமல் வைக்கும் திரிபுரையின் பாதங்கள் என்ற பாட்டு, வெறும் பாட்டுதான் போலும்! பிச்சை யெடுத்துத்தான் மண்டபம் கட்ட வேண்டும் போலிருக்கிறது! என வாய்விட்டுப் பேசியவாறு கண்களில் நீர் வர நின்று கொண்டிருக்கிறேன். "வருவோர் போவோர்'' எல்லாம் வேடிக்கைப் பார்ப்பதுகூட எனக்கு உறைக்கவில்லை. மனமே உடைந்து விட்டது. "கட்டிடம் கட்ட முடியாதவர்கள் ஏன் பெரிய ஜம்பமாக அஸ்திவாரம் போட வேண்டும்? மூன்று ஆண்டுகளாக முட்டிப் பார்க்கிறார்கள்! மூச்! நடக்குமா என்ன? இல்லாத வர்களுக்கு என்ன ஆசை வேண்டிக் கிடக்கிறது?" என்றெல்லாம் பலரின் கேலிக்கு ஆளாகி விட்டோமே என வேதனை தாளவில்லை. மெல்ல மனதை ஆற்றிக் கொண்டு இரவு பத்து மணிக்கு நெமிலிக்கு வரும்போது அன்னை பாலாவின் சன்னிதியில் ஒரே பரபரப்பு. என்னுடைய மைத்துனர் கோதண்டராமன் மீது அன்னை பாலா வந்து அருள் வாக்கிட்டிருக் கிறாள்.

வீட்டில் நுழைந்ததுமே என்னை எல்லாரும் கேட்ட கேள்வி " நீ மரத்தின் கீழே இருந்து

புலம்பினாயா?" என்பதுதான். எனக்கு தூக்கி வாரிப் போட்டது. தொடர்ந்து வீட்டில் உள்ளவர்கள் கூறினார்கள் "என்னோட பையன் மரத்தின் கீழே இருந்துண்டு புலம்பிண்டிருக்கான்! பிச்சையெடுத்து மண்டபம் கட்டறேன்னு சொல்றான்! அவனை என்ன பண்றது? சரி! போகட்டும்!! என்னோட மண்டபத்தை நான் கட்டிக்கறேன்! அவன் வந்த வுடனே சொல்லு! யார்கிட்டேயும் பிச்சை எடுக்க வாண்டாம்னு" என்று மாலை 6 மணியளவில் அருள் வாக்கிட்டிருக்கிறாள்!

நான் சென்னை பாண்டிபஜாரில் மரத்தின் கீழே கூறிய அத்தனையையும் அதே நேரத்தில் நெமிலியில் அன்னை பாலாவின் சன்னிதியில் அருள் வாக்கில் வெளிப்பட்டுள்ளது.

ஆச்சரியத்தால் பிரமித்து விட்டேன்! நான் நடந்ததைக் கூறவும், வீட்டில் உள்ளவர்கள் அசந்து போனார்கள். சென்னையில் புலம்பியதற்கு நெமிலியில் பதில் வருகிறது! இரவு தூக்கம் வந்தால் தானே! "எப்படிப்பட்ட அனுபவம்" இது! மறுநாள் காலை, "அன்னை கூறினாள் அல்லவா நானே எனது மண்டபத்தைக் கட்டிக் கொள்கிறேனென்று" ஆம் அப்படியே அது நடக்க ஆரம்பித்தது. எனது மனைவி தனது சொத்தான "ஒரே தங்கச் செயினைத் தந்து மண்டபம் கட்ட வச்சுக்கோங்க" என்றாளே பார்க்கலாம். அதேபோல் எனது உறவினர்களும் தம்மால் முடிந்த நகைகளைக் கொடுக்க அதனை அரக்கோணம் சாந்திலால் என்ற அன்பரிடம் அடகு வைத்து மண்டபம் கட்டி விட்டோம். அவ்வப்போது எனது அலுவலகத்தில் லோன் போட்டு மெல்ல மெல்ல நான்கு ஆண்டுகளில் அவரவர் நகைகளை மீட்டுத் தந்து விட்டேன்.

ஆம்! இல்லாமை சொல்லி ஒருவர் தம்பால் சென்று இழிவுபட வைக்கவில்லை அன்னை பாலா! அந்த அழகான மண்டபத்தை அமரர் கலைமாமணி கே. வீரமணி அவர்கள்தான் திறந்து வைத்தார்கள்.

"அவனுக்கு மட்டும் சாக்லெட்டா! எனக்கு இல்லையா" என்று அம்மாவிடம் பிள்ளை சண்டை போட்டு பெற்றுக்கொள்வதுபோல்,

"வானதிக்கு மட்டும்தானா அருள்! எனக்கு இல்லையா?" என்று அன்னை பாலாவிடம் சண்டை போட்டு அருள் பெற்றுக் கொண்டதை எண்ணும் போது பிரமிப்பாக உள்ளது.

"அன்பர்கள் பலரும் சேர்ந்து அஸ்திவாரம் போட்டதென்ன! அது அப்படியே ஆண்டுக் கணக்கில் நின்றுவிட்டதென்ன! அதன்பின் வானதி வந்த தென்ன! அவரது கட்டிடம் சிறப்பாக அமைந்த தென்ன! அதனைக் காரணம் காட்டி அருள் பெற்ற தென்ன! இல்லாமை சொல்லி இழிவு படாமல் மண்டபம் முடிந்ததென்ன! என்ன என்ன!" என்று திருமதி கே.பி. சுந்தராம்பாள் போல பாட அல்லவா தோன்றுகிறது.

அவள் நினைத்தாலன்றி ஓர் அணுகூட அசையாது என்பது நாங்கள் கற்ற பாடம்! பயனுள்ள அனுபவம்!

# பாலா நிறைவேற்றிய நிச்சயதார்த்தம்

அருள்மிகும் தேவி அன்னை பாலாவின் சன்னிதிக்கு வந்து செல்வோருக்கு விரைவில் திருமணம் நிகழ்கிறது என்பது அனைவரும் அறிந்ததே. வர இயலாதவர்கள் தபாலில் ஜாதகங்களை அனுப்பி அம்பாள் பிரசாதம் பெற்று சிறப்பாக திருமணம் நடத்தி சந்தோஷப்படுவதும் அனைவரும் அறிந்த ஒரு விஷயமாகும்.

சென்னை தொலைத்தொடர்பு அலுவல கத்தில் கண்காணிப்புப் பொறியாளராகப் பணியாற்றி வரும் அன்பர் திரு. ஆர். ரவீந்தரன் அவர்கள் தமது குடும்பத்துடன் அன்னை பாலாவை தரிசிக்க வந்தார். அன்னையின் பேரெழிலில் மயங்கி அடிக்கடி அன்னையின் தரிசனம் பெற வர ஆரம்பித்தார்கள். அப்போது அவரது தம்பி கிருஷ்ணகுமார் என்னும் அன்பருக்கு திருமணம் தள்ளிக்கொண்டு போனமை யால் "நல்ல இடத்தில் பாலா விரைவில் திருமணம் நடத்தி வைக்க வேண்டும்'' என வேண்டிக் கொண்டார்.

வெள்ளிக் கிழமையிலே – பாலாவின் கோயிலிலே
வேதங்கள் ஒலிக்குதடி – நம்
வேண்டுதல் பலிக்குதடி

என்ற பாடலுக்கு ஒப்ப அவரது தம்பி கிருஷ்ண குமாரின் திருமணம் நடக்க எல்லாவிதமும் கூடி வந்து, 26.1.94 அன்று நிச்சயதார்த்தம் வைக்க தீர்மானித்தார் கள். அதன்படி நிச்சயதார்த்த அழைப்பிதழும் அச்சடித்தார்கள். அன்பர்கள் அனைவரின் விலாச

மும் எழுதினார்கள். அதேபோல் "BALA TIRIPURA SUNDARI, NEMILI" என ஒரு கவரில் விலாசமெழுதி அதனுள் நிச்சயதார்த்த அழைப்பிதழை திரு. ரவீந்திரன் வைத்துவிட்டார். தெரு, நெம்பர், பின்கோட் எல்லாம் தமது டைரியைப் பார்த்து விவரமாக அதனைப் பூர்த்தி செய்ய நினைத்தார். அந்த நேரத்தில் அவசர அழைப்பு வரவே வெளியே சென்று விட்டார். வேலை முடிந்து வீடு திரும்பும்போது பார்த்தால் விலாசம் எழுதிய அத்தனை கவர்களுடன் விலாசம் சரியாக எழுதாத இந்த கவரும் அவருடைய வீட்டார் தபால் பெட்டியில் போட்டுவிட்டனர். ஒருகணம் பதறி விட்டார். "என்ன இப்படிச் செய்து விட்டீர்களே! தபால் பெட்டியில் போடும்போது முழு விலாசம் எழுதாத கவரை எப்படிப் போடலாம்? அந்தக் கவரை எப்படி அஞ்சல் அலுவலகம் டெலிவரி செய்ய முடியும்? இதுவோ வடஆற்காடுஅம்பேத்கார் மாவட்டம், அரக்கோணம் வட்டத்தில் உள்ள நெமிலி. ஆனால் செங்கல்பட்டு எம்ஜிஆர் மாவட்டத்தில் மட்டும் ஏழெட்டு நெமிலியென்னும் ஊர்கள் உள்ளனவே! இது எப்படிப் போகும்? தவறு செய்து விட்டீர்களே" என கடிந்து கொண்டார்.

என்ன செய்வது! ஒரு கணம் தடுமாறியவர் சமாளித்துக்கொண்டு "எல்லாம் அந்த குறும்புக்கார பாலாவின் வேலையாகத்தான் இருக்கும்! தபாலில் என்ன அனுப்புவது? நேராகக் கொடுக்கக் கூடாதா?" என்று கேட்கிறாள்போலும். "சரி! நாம் நாளை நெமிலிக்கே சென்று அன்னை பாலாவின் சன்னிதியிலேயே நிச்சயதார்த்தப் பத்திரிகையை வைத்துவிட்டு வேண்டிவிட்டு வரலாம்" என முடிவு செய்து, அதேபோல் மறுநாள் காலை நெமிலிக்கு வந்து

நடந்த விஷயத்தைக் கூறி நிச்சயதார்த்தப் பத்திரிகையை அம்பாள் பாதங்களில் வைக்கச் சொன்னார்கள்.

அந்த நிமிடத்திலேதான் அந்த லீலா விநோதம் நிகழ்ந்தது. ஆம்! "பாலா திரிபுர சுந்தரி, நெமிலி" என்று மட்டும் போடப்பட்ட கவர் நெமிலி அஞ்சல் அலுவலகத்திற்கு வந்து, அது பீடத்திலே டெலிவரி செய்யப்படுகிறது. போஸ்ட்மேன் மிகவும் ஆச்சரியத் துடன் "என்ன சார் இது? தெரு, நெம்பர், தாலுக்கா, மாவட்டம், பின்கோட் ஏதும் இன்றி நேற்று சென்னையில் போடப்பட்டுள்ள கவர் இன்று இங்கு வந்துவிட்டதே! "சார்ட்" செய்யும் அன்பர்கள் யாருக்காவது நமது நெமிலி பற்றி தெரிந்திருக்குமோ? சரியாக அவர்கள் அரக்கோணம் அனுப்பிட இது உங்களுக்கு டெலிவரியாகிவிட்டதே! இது மகா ஆச்சர்யம் சார்" என்றவாறு கவரை என்னிடம் தந்தார். நான் அவர்களிடம் அதனைக் காண்பிக்கவும் அவர்கள் அசந்து விட்டார்கள்! ஓ! என்னே உன் லீலை! "நேற்று போட்ட விலாசம் சரியாக எழுதாத கவரை இன்று பீடத்திற்கு வரவழைத்து சிரிக்கிறாயா? பாலாவுக்கும் விலாசம் வேண்டுமாடா என்று கேட்கிறாயா?" என்றெல்லாம் அம்பாளைக் கேட்கத் தோன்றியது. அவர்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. 26.1.94 அன்று ஜாம் ஜாமென்று நிச்சய தார்த்தமும், அதைத் தொடர்ந்து செல்வன் கிருஷ்ண மூர்த்திக்கும், செல்வி பாரதிக்கும் சென்னை ராகவேந்திரா கல்யாண மண்டபத்தில் சிறப்பாக திருமணமும் நடந்தது.

அதன்பின் தன் தம்பியுடன் மணமகள் சூழ பாலாவை தரிசனம் செய்ய அனைவரும் வந்திருந்தார்

கள். அப்போது ஒரு நல்ல சேதியை திரு. ரவீந்திரன் கூறினார். அதாவது அவரது தம்பி கிருஷ்ணகுமாரை "ராஜீவ்காந்தி எக்ஸலன்ஸ் அவார்டு 94"-க்கு தேர்வு செய்துள்ளார்கள் என்பதும், அப்படித் தேர்வு செய்வர்களை இறுதியாக ஒரு தேர்வு நடத்தி அதில் வெற்றி பெறுபவர்க்கு விருது வழங்கப்படும் என்ற சேதிதான் அது.

எனவே முடிவுத் தேர்வில் அவர் வெற்றி பெற பாலாதான் அருள வேண்டும் என்று கூறி அவருக்கு வந்த விவரக் கடிதத்தை பாலாவின் பாதத்தில் வைத்தார்கள்!

என்னே பாலாவின் கருணை! திரு. கிருஷ்ண குமார்தான் முடிவாக தேர்வு செய்யப்பட்டு மத்திய அமைச்சர் மாண்புமிகு அர்ஜுன்சிங் அவர்களின் அன்புக் கரங்களாலே 22.8.94 அன்று டெல்லியில் "ராஜீவ் காந்தி எக்ஸலன்ஸ் அவார்டு-94"ஐப் பெற்றார்.

எண்ண எண்ண பிரமிப்பாக உள்ளது. "பாலா லீலா விநோதினி" என்பதுதான் எத்தனை உண்மை!

பாலுக்கு மிஞ்சிய உணவில்லை
பாலாவுக்கு மிஞ்சிய தெய்வமில்லை

என்னும் பழமொழிதான் எத்தனை மகத்தானது!


KOVILOOR ANDAVAR LIBRARY, KOVILOOR
A. No. 16120

# ஸ்ரீ பாலாவின் விஜயம்

அருள்மிகும் தேவி அன்னை பாலாவின் நவராத்திரி விழாவிலே தினமும் உபன்யாசங்கள்! தித்திக்கும் தத்துவங்கள்! அப்படிப்பட்ட நவராத்திரி விழாவிலே கோவை அன்பர் ஒருவர் ஸ்ரீ பாலாவின் நவராத்திரியிலே கலந்து கொண்டு "அம்பாளைப் பற்றிப் பேசலாமா?" எனக் கேட்டார். "தாராளமாக" என்று கூறினோம். அவர் தமது பெயர் பி.ஜி.எஸ். மணியன் எனக்கூறிக் கொண்டார். ஸ்ரீ பாலாவின் அருட்பிரவாகத்தை மிகச்சிறப்பான முறையில் கூறி ஸ்ரீ பாலா சன்னிதியில் "சொற்பொழிவுச் செம்மல்" என்ற பட்டத்தையும் பெற்றார்.

அன்னை பாலாவின் புராணகால வரலாற்றையும், "பாலா லீலா வினோதினி" என்ற உண்மையினையும் "ஸ்ரீ பாலா விஜயம்" என்ற தலைப்பில் தெளிவாக விளக்கினார்.

அடேயப்பா! அந்தப் பொல்லாத பாலாதான் எத்தனை திறமையாக போரிட்டிருக்கிறாள். பண்ட புத்ர வதத்தைத்தான் ஸ்ரீ பாலா எத்தனை பக்குவமாக முடித்திருக்கிறாள்! வாருங்கள்! அவளது புராண காலப் பெருமையை அறிந்து கொள்வோம்!

அருள்மிகும் தேவியாக நெமிலியில் அருளிருக்கை கொண்டு அண்டியவர்க்கெல்லாம் அனுக்ரஹித்து வருகிறாள் அன்னை பாலா திரிபுர சுந்தரி.

அகிலம் ஈன்ற அன்னையை, அகிலாண்ட கோடிப் பிரும்மாண்ட நாயகியை, ஜெகத்துக் கெல்லாம் தாயாக விளங்கும் ஜெகன்மாதாவை ஒன்பது வயதுக் குழந்தையாக, பாலாவாக நெமிலியில் தரிசிக்கிறோம்.

அம்பாளின் உபாசனா விதிகள் "ஸ்ரீவித்யா உபாசனை" என்று சிறப்பாகப் போற்றப்படுகிறது.

ஸ்ரீ என்கிற பதத்துக்கு நிறைந்த செல்வம் என்று அர்த்தம். நாம் பதினாறு பேறுகள் என்று சொல்கிறோம் அல்லவா?

ஸ்ரீ என்கிற பதத்துக்கு மோக்ஷம் என்றும் ஒரு அர்த்தம் உண்டு.

எனவே மோக்ஷத்தை அளிக்கக்கூடிய வித்தை ஸ்ரீவித்யை. அந்த ஸ்ரீவித்யோபாசனையின் முதல்படி ஸ்ரீபாலா உபாசனைதான். ஸ்ரீவித்யா உபாசனையின் அஸ்திவாரமே ஸ்ரீபாலாவின் உபாசனைதான். சிறிய பெண்ணைப்போல விளையாட்டில் ஆசை கொண் டிருப்பவள் அம்பாள். அதனால் பாலா என்கிற பெயா ஜகன்மாதாவுக்கு அமைந்ததாகத் "த்ரிபுரா ரஹஸ்யம்" கூறுகிறது.

''பாலா லீலா விசிஷ்டாத்வாதி பலேதி கதிதாப்ரியே" என்கிறது த்ரிபுரா ரஹஸ்யம்.

ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாமத்திலும் 965 நாமம் "பாலா" என்பதே. அதற்கு அடுத்ததாக 966-வது நாமா வளியில் "லீலா விநோதினி" - என்று சிறப்பிக்கிறது.

"பாலா லீலாவினோதினி" - பாலாவாக - குழந்தையாக இருப்பவள். அதனாலேயே 'லீலா வினோதினி' விளையாட்டில் சந்தோஷப்படுகிறவள்

என்று 965, 966 நாமங்களில் அழகாகச் சொல்கிறது ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்.

அம்பிகையின் விளையாட்டு என்பது எது? ஆக்கல், காத்தல், அழித்தல் என்கிற முத்தொழிலும், பிரபஞ்ச இயக்கமும் அவளுடைய விளையாட்டுத் தான்.

ஸ்ரீவித்யை வழிபாட்டில் பாலாவின் அனுக்ரஹம் ஏற்பட்டால் ஜெகன்மாதாவின் அனுக்ரஹம் வெகு விரைவில் கிடைத்துவிடும் என்பது உபாசனா ரகசியம்.

இத்தகைய சிறப்புக்களை பெற்ற பாலாவின் சரிதம் என்ன? அதை வெகு அழகாகப் பிரம்மாண்ட புராணத்தில் உள்ள **"லலிதோபாக்யானம்"** உரைக்கிறது. லலிதையின் சரிதையை ஜெகன்மாதா லலிதா பரமேச்வரியின் அற்புதச் சரித்திரத்தைச் சொல்வது தான் "ஸ்ரீ லலிதோ பாக்யானம்".

ஸ்ரீ ஹயக்ரீவர் அகஸ்த்ய மாமுனிக்கு எடுத்துரைப்பது போல அமைந்துள்ள இந்த லலிதோ பாக்யானத்திற்குப் பிறகுதான் பிரசித்தி பெற்ற ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் இடம் பெறுகின்றது.

இந்த "லலிதோபாக்யானத்தில்" ஸ்ரீசக்ர வர்ணனை ஸ்ரீபுர வர்ணனைப் பகுதிகள் இறுதியில் வருகின்றன. அவற்றை விலக்கி விட்டு கதைப் பகுதியில் மட்டும் சுமார் 1,800 ஸ்லோகங்கள் உள்ளன.

இவற்றுள் பாலாவின் பெருமையை விளக்கும் ஸ்லோகங்கள் 125 தான். பத்தில் ஒரு பாகம்கூட இல்லை. ஆம்! பாலாவின் சரிதம் அவளைப் போலவே சிறியது. ஆனால் அவளுடைய வல்லமையோ, கருணாப் ப்ரவாகமோ கடலினும் பெரியது.

மன்மதனின் சாம்பலிலிருந்து (மதனனை ஈசன் எரித்ததுதான் நாம் அனைவரும் அறிந்த தாயிற்றே) சிவபெருமான் பூத கணங்களில் ஒருவனான சித்ரசேனன் என்பவனது வேண்டுதலால் ஜனித்த அசுரத் தலைவன்தான் பண்டாசுரன். ஸ்ரீருத்ர ஜபத்தின் அளவிலாத மஹிமையினால் தன்னை எதிர்க்கும் எதிரியின் வலிமையில் பாதி தன்னைச் சேர வேண்டும் என்று அதி சாமர்த்யமாக வரம் பெற்றவன். பூரணப் பிரும்ம சக்தியான, பிரிக்கவும் முடியாத, பகுக்கவும் முடியாத சக்தியான ஜெகன் மாதாவைத் தவிர வேறெவராலும் பண்டாசுரனை வதைக்க முடியாது என்பதனால்,

பண்டாசுரனால் அவதியுற்ற தேவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து ஒரு மஹாயாகம் நடத்தினார்கள். சிதக்னி குண்டம் என்பதாக பத்து மைல் அகலமுள்ள அக்னி குண்டத்தில் தங்கள் சரீரத்தையே ஆஹுதி செய்து கொண்டபோது அவர்களுடைய கார்யசித்திக்காக அந்த அக்னி குண்டத்திலிருந்து ஆயிரம் சூர்யர்களின் உதயகால காந்தியைப் போல செக்கச் செவேல் என்று ஜகன்மாதா ஆதி பராசக்தி பதினாறு வயது பருவ மங்கையாக - பரம லலிதமாக ஆவிர்ப்பவித்தாள்.

**''சிதக்னிகுண்ட ஸம்பூதா தேவ கார்ய ஸமுத்பவா''** என்று துவங்கி அந்த அன்பு அன்னையின் அளவிட முடியாத ஸௌந்தர்யத்தை அழகாக வர்ணிக்கிறது ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்.

அவதரித்த பிறகு தேவர்கள் புத்துயிரும், புத்துணர்ச்சியும் பெற்றனர்.

"லாலனம்" என்றால் கொஞ்சி விளையாடிச் சீராட்டுவது என்று அர்த்தம். தேவர் முதல் மனிதர்

வரை சகல உயிர்களுக்கும் அன்னையாக அனைவரையும் அரவணைத்து கடைத்தேற்ற அவதரித்தவள் என்பதால் "**லலிதா**" என்று திருநாமம் கொண்டாள் அம்பாள்.

அவதரித்த அன்னையையே தங்கள் தலைவியாகக் கொண்டு அவளுக்காக விச்வகர்மா அமைத்த ஒரு புதிய ராஜதானியில் ஈசன் காமேச்வரன் என்று பெயருடன் வர, அவரை மணந்து கொண்டு அரியணை ஏறினாள் ஜெகன்மாதா.

ராஜ்ய பட்டாபிஷேகம் முடிந்ததும், சிம்மாஸனத்தில் அமர்ந்ததும், அந்தப் பெரும் ராஜசபையில் ஒருவர் விடாமல் அனைவர்மீதும் அம்பாளின் விழிநோக்கு ஓடிப் பரவியது. அவளது பார்வை தீண்டிய அக்கணமே அவர்கள் அனைவருமே, அவர்கள் ஒவ்வொருவருடைய சகல விதமான விருப்பங்களும் நிறைவேறி நிறைவுற்றனர்.

கடாக்ஷத்தின் மூலமே அனைவருடைய காம்யங்களையும் அதாவது விருப்பங்கள் அனைத்தையும் பூர்த்தி செய்ததால் பிரம்ம தேவர் அம்பாளுக்குக் "**காமாக்ஷி**" என்கிற திருநாமத்தைச் சூட்டினார்.

இனி அசுர வதம் செய்ய அன்னை ஆயத்தமானாள். நாற்கரங்களைக் கொண்டவள். கரங்களில் கரும்பு வில், மலரம்புகள், பாசம், அங்குசம் ஆகியவற்றைத் தாங்கியவள். அந்த அன்னை தன்னுடைய கரும்பு வில்லிலிருந்து ஒரு சக்தியை ஆவிர்ப்பவிக்கச் செய்தாள். **மந்த்ரிணீ தேவி** அவதரித்தாள். இவள் லலிதா பரமேச்வரியின் மதி மந்திரியானாள். இனிக்கும் கரும்பிலிருந்து அவதரித்த இந்த மந்த்ரிணி தேவிதான் – பிற்காலத்தில் மதுரையில்

மலயத்துவச பாண்டியன் மகள் **மீனாக்ஷி தேவியாக** அவதரித்தாள்.

மலரம்புகளிலிருந்து ஒரு உக்ரமான தேவி தோன்றினாள். வராஹ முகம் கொண்ட இவளே **வாராஹி. தண்டினீ, தண்டநாதை** என்றெல்லாம் பெயர்கள் கொண்ட இவள் அம்பாளின் அனைத்துச் சேனைகளுக்கும் தலைவியாக சேனா நாயகியாக (Commander-in-Chief என்கிறோமே) விளங்கினாள். இந்தத் தண்டநாதா தேவிதான் - பிற் காலத்தில் திருவானைக்காவலில் **அகிலாண்டேஸ்வரியாகத்** திரு வவதாரம் செய்தாள்.

அடுத்து - அம்பாளின் பாசத்திலிருந்து குதிரைப் படையின் தலைவி அச்வாரூடை, அங்குசத்திலிருந்து யானைப் படைத் தலைவி ஸம்பத்கரீ - ஆகியோர் தோன்றினர். பிறகு கணக்கி லடங்காத சக்திகள் போர் வீராங்கனைகளாகப் படைக்கப்பட்டனர். **சக்தி சேனை** உதயமானது.

தேவர் பகை முடிக்கப் புறப்பட்டாள் ஜெகன் மாதா. கேயசக்ர ரதத்தில் மந்த்ரிணியும், கிரி சக்ர ரதத்தில் தண்டினியும், ஸ்ரீசக்ரராஜ ரதத்தில் லலிதையும் அமர்ந்து போர்க்களம் சென்றனர்.

முதல்நாள் யுத்தத்தில் படுதோல்வி கண்ட பண்டாசுரனின் சூழ்ச்சியினால் —

அவனது தம்பியருள் இளையவனான விஷங்கன் இரவில் திடீர்த் தாக்குதல் நடத்த —

அம்பாளின் புருவ அசைப்பில் பொங்கி யெழுந்த பிரதமை முதல் சதுர்த்தசி வரையுள்ள பதினான்கு திதிகளின் நாயகியரான திதி நித்யா

தேவியர் காட்டிய பராக்ரமத்தினால் அசுரப்படை அழிக்கப்பட்டது. விஷங்கன் புறமுதுகிட்டு ஓடினான்.

இனி இவ்வாறு அசுர சேனை அணுகாத வண்ணம் தடுக்க வேண்டி அக்னி சக்தியான ஜ்வாலா மாலினியால் அக்னி அரண் ஒன்று - (அக்னிக் கோட்டை எனலாம்) அமைக்கப்பட்டது.

**''ஜ்வாலாமாலினிகாக்ஷிப்த வஹ்னிப்ராகார மத்யகா''** என்று ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாமம் அழகாக நவில்கிறது.

தோல்வியையே சந்தித்துக் கொண்டிருந்த பண்டாசுரன் இரண்டாவது நாள் போருக்குத் தன்னுடைய முப்பது மைந்தர்களை அனுப்பினான்.

அட்டகாச கர்ஜனையுடன் ''அக்னிக் கோட்டையை அரை நொடியில் அவித்து விடுவோம். அந்த லலிதையைச் சிறையிலடைப்போம்'' - என் றெல்லாம் ஆரவார கோஷமிட்டபடி அக்னிக் கோட்டைக்கு வெளியே வந்து சிம்ம கர்ஜனை புரிந்தார்கள் பண்டனின் புத்திரர்கள்.

அவர்களை எதிர்த்துப் போரிடுவதற்காக உள்ளே குறுஞ்சிரிப்புடன் ஆயத்தமானாள் **பாலா.**

— இதுவரை பிரும்மாண்ட புராணத்தில் பாலாவைப் பற்றி எந்தக் கட்டத்திலும் குறிப்பே இல்லை. முக்கியமாக அன்னை அசுர வதத்துக்காக மந்த்ரிணீ, தண்டினீ, அச்வாரூடை, ஸம்பத்கரீ முதல் அனைவரையும் படைத்துக் கொண்டபோது பாலாவைப் படைத்துக் கொண்டதாக ஒரு சிறு குறிப்பும் இல்லை.

பண்ட புத்ரர்கள் யுத்தத்துக்கு வருகிற இந்தக் கட்டத்தில்தான் முதல்முறையாக "பண்ட புத்ரர்களின் கர்ஜனையைக் கேட்டதும் ஸ்ரீ பாலாம்பிகை உத்ஸாஹம் கொண்டாள். அவள் லலிதாதேவியின் புத்ரி. சக்தி கணங்கள் அனைவராலும் பூஜிக்கத் தக்கவள். மஹா பராக்ரமசாலினி" என்று நீளநெடுக அறிமுகம் நடக்கிறது.

**குமாரீ லலிதா தேவ்யா: தஸ்யா நிகடா வாஸினி**
**ஸமஸ்த சக்தி சக்ரானாம் பூஜ்யா விக்ரம சாலினி**
**லலிதா சத்ரு ஸாகரா குமாரீ பாலாருணாம்பிகாம்**
**தறுச்ரேணி சோண வர்ண வபுரிவதா**

என்கிறது பிரம்மாண்ட புராணம்.

மஹாத்ரிபுர சுந்தரியான ஸ்ரீ லலிதாம்பிகையின் மகள் என்று குறிப்பிடப்பட்டாலும் இவள் வேறு லலிதை வேறு அல்ல என்பதால் **"ஸ்ரீ பாலாத்ரிபுர சுந்தரி"** என்று போற்றப்படுகிறாள்.

ஸ்ரீ லலிதாதேவியைச் சக்ரவர்த்தினி - பட்டத்தரசி - மஹாராக்ஞி- என்று குறிப்பிட்டால்

பாலையைப் பட்டத்து இளவரசீ - **பர்த்ரு தாரிகை** - என்கிறது லலிதோபாக்யானம்.

எப்போதும் ஒன்பது வயதானவள். **"ஸதாநவவர்ஷா"** - என்கிறது புராணம். ப்ரணவப் பொருளான ப்ரம்மச்சர்ய ஸ்வரூபிணியே பாலா. அன்னையைப் போலவே செக்கச் சிவந்தவள். **"நிஜாருணப்ரபாபூர மஜ்ஜத் ப்ரஹ்மாண்ட மண்டலா"** - தனது சரீரத்தின் செம்மைநிறப் பிரகாசத்தினால் பிரும்மாண்டங்கள் அனைத்தையும் மூழ்கச் செய்பவள் - என்பதாக லலிதா சஹஸ்ரநாமம்

லலிதையைப் பற்றி 12-வது நாமாவளியில் ஸ்துதிக்கின்றது.

பாலாவும் அதுபோலவே திக்குகளையெல்லாம் தனது சரீரத்தின் பிரகாசத்தினால் சிவப்பாக்குகிறவள் என்பது பாலாவின் ஸ்ரீவித்யா த்யான ஸ்லோகம்.

அருண கிரண ஜாலை ரஞ்சிதாசாவகாசா
வித்ருத ஜப படீகா புஸ்தகாபீதி ஹஸ்தா
இதர கர வராட்யா புல்ல கல்ஹார ஸம்ஸ்த்தா
நிவஸது ஹ்ருதி பாலா நித்ய கல்யாண சீலா

என்கிறது த்யான ஸ்லோகம்.

அம்மாவோ கரும்புவில், புஷ்பபாணங்கள், பாசம், அங்குசம் கரங்களில் தாங்கியிருக்க,

மகள் பாலாவோ - ஜப மாலையும், புத்தகமும் தரிசித்து அபய வரத முத்ரைகளைக் காட்டிக் கொண்டிருக்கிறாள். ஸகல வித்யைகளுக்கும் பாலாவே பிறப்பிடம்.

**ஸர்வ வித்யா மஹாகநி** - என்று வர்ணிக்கிறது லலிதோபாக்யானம்.

பரம கருணா மூர்த்தியாக நமது அச்சம் நீக்கியபடி அபயந்தந்து கோரிய வரங்களை அளிக்கும் வரதாயகியாகத் திகழ்கிறாள் பாலா.

**நித்ய கல்யாண சீலா** - என்றும் அழிவு என்பதே அற்ற மோக்ஷமே ஸ்ரீ பாலாவின் ஸ்வரூபம். ஸ்ரீசக்ர தேவீகணங்கள் அனைவரும் ராஜகுமாரியான பாலாவைப் பணிந்து ஆராதித்தபோதும், மகளோ ஸ்ரீ லலிதா தேவியின் பாத கமலங்களிலேயே நித்ய வாஸம் புரிந்து வருபவள்.

ஜெகன்மாதாவுக்கு வெளியில் ஸஞ்சரிக்கும் மூச்சுக் காற்றுப் போன்று அத்தனை அருமை யானவள். முக் கண்கள் கொண்ட லலிதையின் நான்காவது நேத்ரம் பாலாதான்.

அது மட்டுமல்ல. அன்னையான லலிதா பரமேச்வரியின் மந்த்ரம் **ஸ்ரீவித்யா** என்று சிறப்பிக்கப் படுகிறதல்லவா? அதுபோலவே மகளான பாலாவின் மந்த்ரமும் **ஸ்ரீவித்யாபாலா** என்றே போற்றப்படுகிறது.

இனி சற்று கதைக்கு வருவோம். பண்ட புத்ரர்களின் கர்ஜனை கேட்டதும் சின்னதாகப் புன்முறுவல் பூத்தாள் பாலை.

மறுகணம் பொங்கி எழுந்தாள். ஸ்ரீ மாதாவை வணங்கி,

"அம்மா! பண்டனின் புத்திரர்கள் யுத்தத்துக்கு அழைக்கிறார்கள். எனக்கு விளையாடிப் பார்க்க ஆசையாக இருக்கிறது. யுத்த விளையாட்டு. அனுமதிக்க வேண்டும்" - என்று கேட்டுக் கொண்டாள் பாலா.

ஜெகன்மாதா அளித்த மறுமொழியில் தெய்வீகமானாலும்கூட தாய்மையின் சிறப்பு மிளிர்ந்தது.

"குழந்தாய்! நீயோ சிறுமி! ஒன்பது வயதுதான் ஆகிறது. மெல்லியதிலும் மெல்லியதான உன் தோள்களுக்கு யுத்தாவேசமா? மகளே! என்னுடைய ஒரே மகள் நீயல்லவா? கணப்பொழுதும் உன்னைப் பிரிந்திருக்க எனக்கு மனமில்லை. எனவே யுத்தத்துக்கு போக வேண்டாம் அம்மா" - என்று மானுடத் தாயின் பாசத்துக்கு உட்பட்டுப் பேசினாள் லோக மாதா.

புவனம் அனைத்திலும் உள்ள சகல ஜீவ ராசிகளுக்கும் அன்னையான எம் புவனேச்வரி பாலாவைத் தன்னுடைய **ஒரே மகள்** என்கிறாள். இதிலிருந்தே பாலாவிடம் லலிதைக்கு உள்ள நேசம் வெளியாகிறதல்லவா?

ஆனால் - பொதுவாகக் குழந்தைகளிடம் உள்ள ஒரு குணவிசேஷம் என்னவென்றால் - நாம் எதைச் செய்ய வேண்டாம் என்று தடுக்கிறோமோ அதிலேயே பிடிவாதமாக ஈடுபட விரும்புவார்கள்.

அந்த ரீதியிலேயே - பாலாவும் அடம் பிடித்தாள். அவளுடைய திடசித்தத்தைக் கண்ட அம்மாவும் மகளை இறுகத் தழுவித் தன் சக்தி முழுவதையும் அவளுக்குள் பிரவகிக்கச் செய்தாள். தன் கவசங்களிலிருந்து ஒரு கவசத்தையும், ஆயுதங் களிலிருந்து ஆயுதங்களையும் தந்தனுப்பினாள். தனது கரும்பு வில்லின் தண்டத்திலிருந்து ஒரு ரதத்தை உருவாக்கித் தந்தாள். கர்ணீரதம் என்று பெயர் பெற்ற பல ஹம்ஸங்கள் பூட்டிய அழகான ரதத்தின்மீது ஆரோகணித்து யுத்தத்துக்குக் கிளம்பினாள் ஸ்ரீ பாலாதேவீ.

கின்னரர் கீதமிசைக்க, ஆவரண தேவதைகள் ஆசீர்வதிக்க சிலர் நமஸ்கரிக்க பாலாவின் ரதம் அக்னிக் கோட்டையின் வாசலை அடைந்தது.

அதைக் கண்டதும் மந்த்ரிணீயும், தண்ட நாதையும் அதிர்ந்து போனார்கள்.

"அம்மா! இது என்ன விளையாட்டு. நாங்கள் இருக்கும்போது நீ எதற்காகச் சிரமப்பட வேண்டும்? பர்த்ருதாரிகே. உன்னை ரணகளம் அனுப்ப அம்பாளுக்கு எப்படி மனது வந்தது? தேவியின்

ஜீவனல்லவா நீ? எனவே திரும்பிச் செல் அம்மா நமஸ்கரிக்கிறோம்" - என்று பரம வாஞ்சையுடன் அவர்கள் இருவரும் பாலாவைத் தொழுதார்கள்.

ஆனால் - பாலாவோ சற்றும் சளைக்காமல் மறுமொழி பேசாமல் முன்னேறிச் சென்றாள்.

யுத்த தர்மப்படி சமஸ்தானத்தில் உள்ளவர்களே எதிரெதிராக யுத்தம் புரிய வேண்டும். வந்திருப்பதோ பண்ட ராஜகுமாரர்கள். அவர்களை எதிர்க்க வேண்டியவள் சக்தி ராஜகுமாரிதானே. எனவே திரும்பிச் செல்லுதல் தர்மமன்று என்று கருதி முன்னேறினாள் பாலாம்பிகை. மந்த்ரிணியும், தண்டநாதையும் அவளுக்குப் பாதுகாப்பாக இருபுறமும் அபரிமிதமான ஸேனைகளுடன் சென்றனர். கோட்டை வாசல் கடந்ததும் சக்தி சேனைகள் இளவரசியை நமஸ்கரித்தனர்.

தனது பிஞ்சுக் கையால் ஆசிகளை அளித்த வண்ணம் யுத்தகளத்தில் பாலை நுழைந்தாள்.

அசுரர்கள் ஆவேசமாகச் சரங்களை எய்தனர். பாலாவும் சளைக்காமல் மழையாகப் பாணங்களை வர்ஷித்தாள்.

மந்த்ரிணியும், தண்டநாதையும் பேராச்சரியம் அடைந்தார்கள். அவர்கள் போர் புரிவதற்கே இடம் அளிக்காமல் தங்களது பட்டத்து இளவரசியே புரியும் யுத்த ஸாஹஸங்களைக் கண்டு தங்கள் வில்லையும் அம்பையும் ரதத்தில் வைத்துவிட்டு அமர்ந்தபடி பாலாவின் சத்ரு ஸம்ஹாரத்தை வியப்புடன் பார்த்து ரஸித்துக் கொண்டிருந்தார்கள்.

அதே சமயம் மற்ற பரிவாரங்கள் உடனுக்குடன் பாலாவின் யுத்த ஸாஹஸங்களை அக்னிக்

கோட்டைக்குள் இருக்கும் ஸ்ரீ லலிதா தேவியிடம் ஓடி ஓடிச் சென்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். மகளின் வீரதீர பராக்ரமத்தைக் கேட்டுத் தாய் சந்தோஷம் அடைந்தாள். இதனை ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமமும், பிரும்மாண்டபுராணமும் போட்டி போட்டுக்கொண்டு வர்ணிக்கின்றன.

தாபிர்நிவேத்யமாநாநி ஸா தேவீ லலிதாம்பிகா |
புத்ர்யா புஜா பதானானி ஸ்ருத்வா ப்ரீதிம் ஸமாயளெ ||

— பிரும்மாண்ட புராணம்

இதையே

பண்ட புத்ர வதோத்புக்த பாலா விக்ரமநந்திதா ||

என்று ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் 74-வது நாமாவளி சொல்கிறது.

இரண்டாம்நாள் யுத்தம் முழுக்க முழுக்க பாலாவின் யுத்தமாயிற்று.

நேரம் நகர்ந்தது. குழந்தைக்கு விளையாட்டு சலித்து விட்டது. யுத்தத்தை விரைவில் முடிக்க நினைத்து விட்டாள். நாராயண அஸ்த்ரத்தை எய்தாள். பண்ட புத்ரர்களுடன் வந்த இருபது அக்ஷோஹிணீ சேனையும் க்ஷண காலத்தில் பஸ்மமானது. வெகுண்ட பண்டபுத்திரர்கள் முப்பது பேரும் ஒன்றுகூடி ஏக காலத்தில் அன்னையின் மீது தாக்குதல் நடத்தினார்கள். பாலா பயப்படவில்லை. சளைக்கவும் இல்லை. அவளும் ஏக காலத்தில் முப்பது அம்புகளைத் தொடுத்து அவர்களின் சிரங்களை அறுத்து யமாலயம் அனுப்பினாள்.

இப்படி வெகு லகுவாக மாபெரும் யுத்தத்தினை சர்வ சாதாரணமாக முடித்து விட்டாள் அன்னை பாலா.

மந்த்ரினீயும், தண்டநாதையும் பாலையைத் தூக்கிச் சுமந்து கொண்டு ஆனந்தக் கூத்தாடிக் கொண்டு பரிவாரங்களின் ஆரவாரத்துடன் அன்னையிடம் திரும்பினார்கள்.

தேவீ அடைந்த ஆனந்தத்துக்கு அளவே இல்லை. ஸ்ரீபாலாவைத் தூக்கித் தன் மடிமீது அமர்த்திக் கொண்டு உச்சி முகர்ந்து கொண்டாடினாள் ஜெகன்மாதா.

பிறகு — அன்னையுடனேயே கரைந்து ஐக்கியமாகிப்போன பாலையைப் பற்றி - பிரும்மாண்ட புராணத்தில் செய்தி எதுவும் இல்லை. ஆதியும் அந்தமும் அற்ற அந்த அற்புதச் சரித்திர நாயகியை

— பண்ட புத்ரர் வதத்துக்குப்பிறகு நாம் நெமிலியில் தான் கண முடிகிறது.

பாலாவின் சிறப்பையும் பெருமையையும் பேசிக் கொண்டே போகலாம். எழுதிக்கொண்டே இருக்கலாம்.

ஸ்ரீ வித்யையில் - பாலாவின் பீஜ மந்திரங்கள் எளியவை.

அவளது - ரூபமும் சிறியது. சரீரமும் சிறியது. மந்த்ரமும் சிறியது.

மூன்றே மூன்று பீஜாட்சரங்கள்தான். ஆனால் வலிமை வாய்ந்தவை. அதே சமயம் கடுமையான உபாசனைக்குரியவை பாலாவின் உபாசனைதான்.

பாலா மந்த்ரம் இல்லாமல் நவாக்ஷரீ, பஞ்சதசி, ஷோடசீ மந்த்ரங்கள் உபதேசிக்கப்படுவதில்லை. பாலாவின் மந்த்ரங்கள் மூன்று அக்ஷரங்களில் அடங்கும். எனவேதான் – இதைத்தான்

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் 630–வது நாமமாக "**த்ரியக்ஷரீ**" – என்று மூன்று அக்ஷரங்களின் ஸ்வரூபமாக இருப்பவள் என்று பாலா மந்த்ர ஸ்வரூபிணியாக அம்பாளைப் போற்றுகிறோம்.

ஸ்ரீ பாலாவின் மந்த்ரத்தின் மூன்று பீஜங்களே பஞ்சதசியின் மூன்று கூடங்களாகின்றன.

"**ஐம்**" – என்பது வாக்பவ பீஜம். இது சரஸ்வதி பீஜம். இதை உபாசித்தால் கவித்துவமும், சகல சாஸ்திரங்களிலும் தேர்ச்சியும், சரஸ்வதி கடாக்ஷமும் லகுவாகச் சித்திக்கும்.

அடுத்தது

"**க்லீம்**" – இது காமராஜ பீஜம். நமது ஸகலமான விருப்பங்களையும் நிறைவேற்றிக் கொள்ள பெரிதும் உதவும் இது.

கடைசியாக வருவது **ஸௌ** – இது சக்தி பீஜம். ஜகன்மாதாவின் பரிபூரண அநுக்ரஹத்தைப் பெற்றுத் தரக்கூடிய வல்லமை வாய்ந்தது. நெமிலியும் மூன் றெழுத்துக்களே! வானதியும் மூன்றெழுத்துக்களே!

முறைப்படி குருமுகமாக உபதேசம் பெற்று பாலாவின் மந்த்ரங்களை ஜெபம் செய்பவர்கள் ஜகன் மாதாவின் பரிபூரண அநுக்ரஹத்துக்குப் பாத்திர மாவார்கள்.

இன்னும் சொல்லப்போனால் பாலாவை "**லகு ஸ்ரீ வித்யா**" – என்பார்கள். பெரும்பாலோர்

பாலாவுடனேயே நின்று விடுவதும் உண்டு. எனவே லலிதைக்கு உள்ளது போன்றே பாலாவுக்கும் கட்கமாலா (புஷ்பாஞ்சலி ஸ்துதி) - நவாவரண பூஜை எல்லாமே உண்டு.

தமிழ்நாட்டில் நெடுங்காலமாக பாலா வழிபாடு நிலவி வருகிறது.

பதினெட்டுச் சித்தர்கள் பாலாவை உபாசித்தே மாபெரும் சித்துக்களையெல்லாம் செய் திருக்கின்றனர். "வாலையடி சித்தருக்குத் தெய்வம்" என்ற பாடல் இதனைத் தெளிவு படுத்துகிறது.

சித்தர் பாடல்களில் தனிச் சிறப்புப் பெற்ற பாடல் **"வாலைக்கும்மி"** ஆகும். கொங்கணச் சித்தர் அருளிய இந்த "வாலைக்கும்மி"யில் *104* **பாடல்கள்** அமைந்துள்ளன.

வாலைக்கும்மியைக் குறிப்பிடாவிட்டால் பாலாவின் விஜயம் முழுமையடையாது என்பதாலோ என்னவோ - எளியேனுக்கு இதை எழுத ஆரம்பிக்கும் முன்பாக "வாலைக்கும்மிப்" பாடல்களை அம்மையே உணர்த்தினாள்.

நெஞ்சைத் தொடும் பல வரிகள். எளிய தமிழில் பாமரரும் புரிந்து கொள்ளும் வகையில் அற்புதமான கருத்துக்கள் இவற்றில் கொட்டிக் கிடக்கின்றன. அவற்றில் குறிப்பாகச் சிலவற்றைக் கீழே காண்போம்.

முக்கோண வட்ட கிணற்றுக்குள்ளே மூல
மண்டல வாசிப் பழக்கத்திலே
அக்கோண வட்டச் சக்கரத்தில் வாலை
அமர்ந்திருக்கிறாள் வாலைப் பெண்ணே - (54)

— என்று ஸ்ரீ சக்ர நிவாஸினியாக பாலையைச் சித்தர் விவரிக்கிறார்.

பாலாவைக் கண்ணால் காணவும், நினைப்பால் அளவிடவும் முடியாது. பக்தியினாலும், ஆத்மார்த்தமான ஈடுபாட்டினாலும்தான் அடைய முடியும் என்பதை

வாலை காணவு மெட்டாள்
நினைக்க வெட்டாள் – (55)

— காட்சிக்கும், எண்ணத்துக்கும் எட்டாதவளாகப் பாலாவைச் சித்தர் படம்பிடித்துக் காட்டுகிறார்.

பாலாவை பரமேஸ்வரனுடன் ஐக்கியப் படுத்திப் பாடுகையில் ஈசனின் செயல்களை பாலாவின் செயல்களாக்கிப் பாடுகிறார். இதோ —

காலனை காலா லுதைத்தவளாம் வாலை
ஆலகால விடமுண்டவளாம்
மாளாச் செகத்தைப் படைத்தவளாம் இந்த
மானுடன் கோட்டை யிடித்தவளாம் – (57)

என்கிறார்.

மனித உறவுகள் அனைத்துமே பாலாவின் வடிவங்களாகக் காண்கிறார் அடுத்த பாடலில்;

மாதாவாய் வந்தே அமுதந் தந்தாள் மனை
யாட்டியாய் வந்து சுகங் கொடுத்தாள்
ஆதரவாகிய தங்கையானாள் நமக்(கு)
ஆசைக் கொழுந்தியும் மாமியானாள் – (58)

என்று அன்னை, மனைவி, தங்கை, கொழுந்தி, மாமி - என்று மனித உறவுகள் அனைத்துமாய் பாலாவே விளங்குகிறாள் என்கிறார்.

அதோடு அமையவில்லை. பண்டபுத்திரர்களைச் சைன்யத்துடன் பாலா அழித்ததை;

ஒருத்தியாகவே சூரர்தமை வென்றாள்

என்கிறார் கொங்கணச் சித்தர்.

இத்தனைச் சிறப்புகள் வாய்ந்த ஜெகன் மாதாவின் ஸ்வரூபமான பாலாவை உபாசிப்பது எளிதல்ல. ஸௌந்தர்ய லஹரியில் முதல் ஸ்லோகத்திலேயே ஆதிசங்கரர் "முற்பிறவிகளில் புண்ணியம் செய்யாதவன் உன்னை வணங்கவோ, துதிக்கவோ முடியாது" - என்கிறாரே.

ப்ரணந்தும் ஸ்தோதும் வா கதமக்ருத
புண்யப் ப்ரபவதீ

என்கிறாரே. அதே போலவே கொங்கணச் சித்தரும்,

விந்தையாய் வாலையைப் பூசிக்க முன்னாளில்
விட்டகுறை வேணும் வாலைப் பெண்ணே - (66)

என்கிறார்.

பாலா உபாசனையால் சித்திகள் பலவும் கைவரப் பெறும் என்பதை உணர்த்தும் வகையில்,

வாலையைப் பூசிக்கச் சித்தரானார் வாலைக்
கொத்தாசையாய்ச் சிவ கர்த்தரானார் - (67)

என்கிறார்.

மேலும்

வாலைக்கு மேலான தெய்வமில்லை - மானம்
காப்பது சேலைக்கு மேலுமில்லை
பாலுக்கு மேலான பாக்கியமில்லை வாலைக்
கும்மிக்கு மேலான பாடலில்லை - (68)

என்று பாலாவுக்கு மேலான தெய்வம் ஏதுமில்லை என்கிறார். இப்படி பாலாவை உபாசிப்பதால் கிடைக்கும் பலன்களை பாமரரும் அறிந்து கொள்ளும் படி எளிய தமிழில் கொங்கணச் சித்தர் பாடுகிறார்.

அந்த வரிகள்:

ஆயுசு கொடுப்பாள் நீரிழிவு முதல்
அண்டாது மற்ற வியாதியெல்லாம்
பேயும் பறந்திடும் பில்லி விடியில்
பத்தினி வாலைப் பெண் பெயரைச் சொன்னால்–(98)

நித்திரை தன்னிலும் வீற்றிருப்பாள் எந்த
நேரத்திலும் வாலை முன்னிருப்பாள்
சத்துரு வந்தாலும் தள்ளி வைப்பாள் வாலை
உற்ற காலனையுந் தானுதைத்தாள் – (99)

பல்லாயிரம் கோடி அண்டம்முதல்
பதினான்கு புவனமும் மூர்த்தி முதல்
எல்லாந் தானாய் படைத்தவளாம் வாலை
எள்ளுக்குள் எண்ணெய் போல் நின்றவளாம் – (100)

– எவ்வளவு எளிமையான அருமையான தமிழில் பாலாவைப் பற்றி அழகாகக் கும்மிப் பாடல்களினால் போற்றியிருக்கிறார் கொங்கணச் சித்தர்.

நாம் தூங்கும் நேரத்திலும் அவள் நம்முடன் இருக்கிறாள் என்பதை இந்த வாலைக் கும்மிப் பாடல்கள் எத்துணை அழகாக உணர்த்துகின்றன.

கூப்பிட்ட குரலுக்கு ஓடிவரும் குழந்தைத் தெய்வம்தான் பாலா.

அகிலம் ஈன்ற அருளன்னையை, அகிலாண்ட கோடிப் பிரும்மாண்ட நாயகியை ஜெகன்மாதாவை நாம் குழந்தை வடிவில் நெமிலியில் தரிசிக்கிறோம்.

தாயைக் குழந்தையாக வழிபடுவதில் உள்ள தாத்பர்யம் என்ன?

நமது நடமாடும் தெய்வமாம் ஸ்ரீ காஞ்சி காமகோடிப் பரமாச்சாரியார்கள் இதனை வெகு அழகாக நமக்குப் புரிய வைக்கிறார்கள்.

"லோக மாதாக்களாக இருக்கப்பட்ட தெய்வங்களைக் குழந்தையாக வரச் சொன்னதில் நிரம்ப விசேஷம் இருக்கிறது". 'குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்திலே' என்கிறோம். தெய்வமே குழந்தையாக வந்தால், ரொம்பக் கொண்டாட்ட மாகும். குழந்தைக்கு நம்மைப்போல் காமமும், குரோதமும், துக்கமும் வேரூன்றி இருப்பதில்லை. இந்த க்ஷணத்தில் ரொம்பவும் ஆசைப்பட்ட வஸ்துவை அடுத்த க்ஷணத்தில் தூக்கிப் போட்டுவிட்டுப் போகிறது. கோபமும் இப்படியே சுவடு தெரியாமல் நிமிஷத்தில் மறைந்து போகிறது. அழுகையும் இவ்வாறேதான். நாம்தான் உணர்ச்சிகள் ஆழ உள்ளுக்கு வாங்கிக்கொண்டு மனத்தைக் கெடுத்துக் கொள்கிறோம். உணர்ச்சிகள் வேரூன்றாமல் நாமும் குழந்தைகளைப்போல் ஆனந்தமாக இருக்க வேண்டும். இதனால்தான் உபநிஷதமும் "குழந்தையாய் இரு" என்கிறது.

சாக்ஷாத் பராசக்தியைக் காத்யாயனியாகவும், மஹாலக்ஷ்மியைப் பார்கவியாகவும் குழந்தைகளாக்கி, அந்த பாவத்திலேயே வழிபட்டால் நமக்கும் குழந்தைத் தன்மை சாக்ஷாத்கரித்து விடும்.

இந்த நாளில் வாட்டர்ஃப்ரூப் (Water Proof) என்று சொல்வதுபோல், நாம் காம ப்ரூஃப், சோக ப்ரூஃப் எல்லாமாக, சாந்தமாக ஆகி விடுவோம்.

**குழந்தை ரூபத்தில் இருந்தாலும் ஞானப் பாலூட்டும் ஸ்ரீமாதாவாக இருக்கிற தேவி, நமக்கு இந்த அநுக்ரஹத்தைச் செய்வாள்.**

—பரமாச்சார்யாள் முகிழ்த்த சொற்களுக்கு இணங்க அவரே நெமிலியில் பாலாவைக் கண்டு தானுமே ஒரு குழந்தையாக மாறித் தரிசித்து புளகாங்கிதம் அடைந் திருக்கிறார்கள்.

பஹ்வ்ருசோபநிஷத் - உபாசகர்களால் பாவிக்கப்படும் ஜெகன்மாதாவே க்ஷோடசீ, ஸ்ரீவித்யா, பஞ்சதசாக்ஷரீ, மஹாத்ரிபுரஸுந்தரீ, **பாலா,** அம்பிகா... என்று பலவாறாகப் பிரகாசிப்பவள் என்று போற்றுகிறது.

அத்தகைய பாலாத்ரிபுரசுந்தரி குழந்தைத் தெய்வமாக நெமிலியில் அருளிருக்கை கொண்டு நம்க்கு வித்தையும், செல்வமும், ஞானமும் அளித்துக் கொண்டிருக்கிறாள்.

அவள் பதமே நாளும் போற்றுவோம்.

# பாலாவும் பதினெட்டுப் படிகளும்

அரக்கோணத்தில் வக்கீலாகப் பணிபுரியும் நண்பர் திருவேங்கடமும், ஜவுளி அதிபர் நண்பர் ராமச்சந்திரனும் "கவிஞர் சார்! நாங்கள் அடுத்த வாரம் சபரிமலை செல்கிறோம். வேனில்தான் செல்கிறோம். நீங்கள் இதுவரை சபரிமலை வந்த தில்லையே! கட்டாயம் எங்களோடு வரவேண்டும்" என்று அன்புக் கட்டளையிட்டார்கள்.

நானும் இதுவரை சபரிமலை சென்று ஐயப்ப ஸ்வாமியை தரிசனம் செய்ததில்லை. "மோகினியாள் தந்த மோகனனே" என்ற எனது பாடலை இசைமணி சீர்காழி எஸ். கோவிந்தராஜன் அவர்கள் இசைத் தட்டிலே பாடியிருக்கிறார். "மூவாறு படிவிளங்கும் முன்னவன்" என்ற பாடலையும், "சொல்லு பாப்பா - சொல்லு பாப்பா - சுகம்தரும் தெய்வம் எங்கள் ஐயப்பா" என்ற பாடல்களை இளைய இசைமணி டாக்டர் சீர்காழி சிவசிதம்பரம் இசைத் தட்டில் பாடியிருக்கிறார். திரைப்படப் பாடகர் ஜெயச் சந்திரன் அவர்கள் "சபரிமலை சென்றால் சங்கடங் கள் இல்லை" என்ற பாடலையும், கலைமாமணி கே. வீரமணி அவர்கள் "தென்றலே தென்றலே மெல்லப் பேசு" என்று ஐந்து பாடல்களையும் பாடி யுள்ளார்கள். அத்தனையும் எச்.எம்.வி. நிறுவனம் கேஸட்டாக வெளியிட்டுள்ளது.

ஆனால் இதுவரை நான் சபரிமலைக்கு சென்றதே இல்லை. திடீரென்று நண்பர்கள் கூறவும் எனக்கு சந்தோஷம்தான். ஆனால் மாலை போட

வில்லையே! ஒரு வாரத்திற்குள் கிளம்ப வேண்டுமே! மாலை போடாமல் விரதம் இருக்காமல் சபரிமலை செல்லுவது சரியா? என்ற ஐயம் எனக்கு. "பரவாயில்லை சார்! ஒருவாரம் தினமும் சுத்தமாக இருந்தால் போதும்! கிளம்புகின்ற நாளன்றுகூட மாலை போட்டுக்கொண்டு செல்லலாம்" என சமாதானம் கூறினார்கள். எனக்கு மனம் ஒப்பவில்லை. மாலை போட்டால் ஒரு மண்டலமாவது சரணம் கூறி - ஐயப்ப பூஜை செய்து - இருமுடி தாங்கி சபரிமலை செல்வதுதானே உசிதம்! எனவே கடைசி நாளன்று மாலைபோட்டுச் செல்லும் எண்ணம் வரவே இல்லை.

உடனே சுப்ரீம் கோர்ட்டுக்குச் சென்று விட்டேன். ஆம்! ஸ்ரீபாலா திரிபுர சுந்தரியின் சன்னதி தான் எங்களுக்கெல்லாம் சுப்ரீம்கோர்ட்.

"மாலை போடாமல் சபரிமலை செல்ல லாம்" என்று ஒரு சீட்டும், "கிளம்பும் நாளன்று மாலை போட்டுக்கொண்டு செல்லலாம்" என்று ஒரு சீட்டும் எழுதி சன்னிதியில் வைத்து விட்டேன். ஒரு குழந்தையைக் கூப்பிட்டு இரண்டு சீட்டுகளில் ஒன்றை எடுக்கச் சொன்னேன்.

"மாலை போடாமல் செல்லலாம்" என உத்திரவு வந்தது.

கிளம்பும் நாளன்று எங்கள் வீட்டில் உள்ள உறவினர் குழந்தைக்கு அம்மை போட்டதால் போகலாமா கூடாதோ என்ற ஐயம். சபரிமலை போனாலும் மலையேறக் கூடாதோ என்ற சந்தேகம். மீண்டும் அம்பாள் சன்னிதியில் சீட்டுபோட்டு எடுத்ததில் "மலையேறிச் செல்லலாம்" என உத்தரவு கிடைத்தது.

அதன்படி மிகவும் ஆனந்தத்துடன் "விஷு" தரிசனம் காண சபரிமலைக்கு அனைவரும் சென்றோம்.

பம்பையில் நீராடி விட்டு மலையேறினோம். இருமுடி தரித்தவர்க்கே பதினெட்டுப் படி ஏற அனுமதி. மாலைபோடாமல் வந்தவர்க்கு தனி வழியாக அனுமதி.

அதன்படி என்னுடன் இருமுடி தரித்து வந்தவர்கள் பதினெட்டுப் படி ஏறிச்செல்ல நானும் மாலை போடாத நண்பர் ஒருவரும் வேறு வழியாகச் சென்றோம்!

அங்கேதான் காத்திருந்தது ஒரு பெரிய சோதனை. இருமுடி தாங்கியவர்கள் கியூ வெகு வேகமாகச் சென்றது. மாலை போடாதவர்கள் கியூ அப்படியே நின்று விட்டது. நாங்கள் கியூவில் நிற்கும் போது காலை மணி 8. எனக்கு முன் நிற்பவர்கள் விடியற்காலை முதல் நிற்கிறார்களாம். எப்படிப் பார்த்தாலும் மதியம் 1 மணிக்கு மேல்தான் எங்கள் கியூ நகருமாம்! ஏனெனில் இருமுடி தரித்தவர்கள் கூட்டம் மிகவும் அதிகமாக இருந்ததால் அவர்களுக்கே முதலிடம். அவர்கள் கியூதான் நகர்ந்தது.

"எங்கள் கியூ 1 மணிக்கு நகர்ந்தாலும், நாங்கள் இருவரும் ஐயப்ப தரிசனம் பெற மாலை 4 மணி ஆகலாம்" எனக்கூற, அதிர்ச்சி அடைந்தோம். இருமுடி தரித்த அன்பர்கள் காலை 10 மணிக்கு வெளியே வந்து விடுவார்கள். கீழே இறங்கி மதியம் 12 மணிக்கு வேன் கிளம்புவதாக ஏற்பாடு. நாங்கள் மாலை 4 மணிக்கு தரிசனம் செய்தால் எப்படி?

எனக்கு மிக வருத்தமாகப் போய்விட்டது. "மாலை போடாமல்" வந்ததற்கும், ஒரு மண்டலம் நோன்பிருந்து வராமல் அப்படியே வந்ததற்கும் இதுதான் சரியான தண்டனை என்று என் மனம் குத்திக் காட்டியது.

"ஐயப்பா! உன்னைப்பற்றி பல பாடல்கள் எழுதியிருக்கிறேனே! எனக்கு ஒரு வழி காட்டக் கூடாதா" என்று மானசீகமாகப் பிரார்த்தனை செய்தேன்.

அதேசமயம் நெமிலி ஸ்ரீபாலாவுக்கு அப்ளிகேஷன். "அம்மா! உன்னோட உத்தரவின் பேர்லேதானே மாலை போடாமல் வந்தேன். இப்படி ஒரு சோதனையா? இவ்வளவு தூரம் வந்து மணிகண்டனைத் தரிசிக்காமல் செல்வதா? உனது லீலா வினோதங்களில் இதுவும் ஒன்று" என நொந்து கொண்டேன்.

அப்போது கேரளா உயர் போலீஸ் அதிகாரி ஒருவர் வர அவருக்கு வழிவிடுவதற்காக இரண்டு போலீஸ் கான்ஸ்டபிள்கள் எங்கள் கியூவை உடைத்து வழி ஏற்படுத்தினார்கள்!

திடீரென்று ஓர் எண்ணம்! "கியூவில் நின்றாலும் 10 மணிக்குள் தரிசனம் இல்லை! சரி! இந்த உயர் போலீஸ் அதிகாரியிடம் கேட்கலாமா?" என்று நினைத்து கியூவை விட்டு விட்டு வெளியே வந்தேன். என் அருகில் வந்த அந்த போலீஸ் அதிகாரிக்கு வணக்கம் சொல்லி ஆங்கிலத்திலேயே நான் ஸ்ரீபாலா பீடத்தினின்று வருவதைக் கூறி, "உடன் தரிசனம் ஆகாவிட்டால் நண்பர்கள் போய்விடுவார்கள்! எனவே நானும் தரிசனம் இன்றி செல்ல வேண்டியது தான்" என்பதை விடுவிடுவென்று கூறி விட்டேன்.

ஒருகணம் நின்ற அவர் மறுகணம் "கம் வித் மி" எனக் கூறினார். அவ்வளவுதான். இரண்டு பேரும் அவர் பின்னாலேயே சென்றோம். அனைவரும் அவருக்கு வழிவிட்டு விட்டார்கள். அவர் ஐயப்பன் சன்னிதிக்கு எதிரே இருந்த சிறிய திண்ணையைக் காண்பித்து அங்கிருந்து தரிசனம் செய்யச் சொன்னாரே பார்க்கலாம். அந்தத் திண்ணையில் அமர்ந்து நிம்மதியாக 10 நிமிடம் சபரிமலை சாஸ்தாவைக் கண்குளிரக் கண்டோம். அப்போது இருமுடி தாங்கி வந்த எங்கள் நண்பர்கள் கூட்ட மிகுதியால் ஒரு நிமிடம்கூட சன்னிதிமுன் நிற்க இயலாது சென்றுகொண்டே தரிசனம் செய்ய வேண்டியதாகி விட்டது.

திருப்தியாக தரிசனம் முடித்து அவரிடம் விடைபெற்று வெளியே வந்தோம்.

யார் அந்த உயர் போலீஸ் அதிகாரி? எங்கள் வேண்டுகோளை ஏற்று மனமிரங்கியதின் காரணம் என்ன? ஐயப்பன் சன்னிதியிலே உள்ள சின்னஞ்சிறிய இரு திண்ணைகளிலும் நாங்கள் இருவரும் அமர்ந்து சிறப்பாக 10 நிமிடம் தரிசனம் பெற என்ன காரணம்? அந்த நேரத்தில் அங்கே போலீஸ் அதிகாரி வர வேண்டிய அவசியம் என்ன? ஆம்! அதுதான் பாலாவின் லீலா விநோதம்! அவளையே சரண் அடைந்தவர்க்கு அவள்தரும் அடைக்கலம்!

இருமுடி தாங்கி வந்த நண்பர்கட்கு ஒரே ஆச்சர்யம்! எப்படி இந்த அற்புதம் நிகழ்ந்தது என்று அவர்களால் எண்ணி எண்ணி வியக்காமல் இருக்க முடியவில்லை. மாலை போட்டு வந்த நெமிலி இறைபணி மன்ற உபதலைவர் வேணுகோபாலும், ஓய்வு பெற்ற தலைமை ஆசிரியர் திருஞானம்

அவர்களும் "எல்லாம் பாலாவின் திருவிளையாடலே" என்று அடித்துக் கூறினார்கள்.

சாஸ்தாவைக் காணவைத்த நெமிலி அன்னை பாலாவின் பாதாரங்களில் சாஷ்டாங்க நமஸ் காரத்தை மானசிகமாகச் செய்தோம்.

என்னே பாலாவின் கருணை உள்ளம்!

## நாளும் கோளும் ஏது
## சிவ நாயகி துணை வரும்போது

---

நெமிலி ஸ்ரீபாலா பீடத்தைச் சேர்ந்த அன்பர்கள் காளஹஸ்தி, நெல்லூர் ஜொன்னவாடா காமாட்சி கோயில், மஹா நந்தி, ஹைதராபாத் பிர்லா மந்திர், மந்திராலயா ஆகிய ஊர்களுக்கு ஆன்மீகச் சுற்றுலா செல்ல நினைத்து 16.7.94 முதல் 20.7.94 வரை தீர்மானம் செய்து சகல ஏற்பாடுகளும் செய்தோம்.

10.7.94 அன்று வானொலி, டி.வி. பத்திரிகைகளில் வெளிவந்த ஒரு செய்தி அனைவரின் வயிற்றிலும் புளியைக் கரைத்தது. ஆம்! 16.7.94 சனிக்கிழமை இரவு 12 மணியளவில் வால் நட்சத்திரம் மோதும் காட்சியை வானில் பார்க்கலாம் என்றும், அதனால் பெரிய விளைவுகள் ஏற்படலாம் என்ற செய்திதான் அது. 10.7.94 முதல் 14.7.94 வரை ஐந்து நாட்களும் ஒரே குழப்பம்! பயணத்தைத் தள்ளி வைத்து விடலாமா என்று சிலர். "அருள்மிகும் தேவி அன்னை பாலா திரிபுர சுந்தரி சரணம் - இருள்தனை நீக்கும் தாயே பாலா திரிபுர சுந்தரி சரணம்" என்ற பாடலிலே "நாளும் கோளும் ஏது? - சிவ நாயகி துணைவரும்போது" என்று பாடலை எழுதி விட்டு நாம் குழம்பலாமா? பாலாவின் மீது பாரத்தைப் போட்டு விட்டு தைரியமாக பயணத்தைத் தொடரலாம் என்று சிலரின் வாதம். 15.7.94 வெள்ளிக் கிழமை இரவு அம்பாள் பூஜை பார்த்துக் கொண்டு 16.7.94 சனிக்கிழமை விடியற்காலை 2 மணிக்கு

காஞ்சிபுரம் பாரதிரோட்வேஸ் பஸ்ஸில் துணிச்சலாகப் பயணத்தைத் தொடங்கினோம்.

காளஹஸ்தி, நெல்லூரில் உள்ள ஜொன்னவாடா காமாட்சி கோயில் ஆகியவற்றை தரிசனம் செய்து இரவு 10 மணியளவில் மஹாநந்தி சென்றோம். அன்று இரவு 12 மணிக்கு தானே வால் நட்சத்திரம் மோதும் அந்த நிகழ்ச்சி. மகாநந்தியில் உள்ள ஒரு சத்திரத்தில் அனைவரும் தங்கினோம். பயணக் களைப்பு. அனைவரும் ஆனந்தமாக உறங்கி விட்டோம்! "இரவு 12 மணியளவில் என்ன நடக்குமோ ஏது நடக்குமோ?" என்ற கவலையின்றி மிகவும் சுகமான தூக்கம். 17.7.94 ஞாயிறு விடியற்காலம் 4 மணிக்கு விழிப்பு வந்து எழுந்து பார்க்கிறோம். எந்தவித சேதமும் இல்லை. பத்திரிகைகளும், சென்னை வானொலியும், டி.வி.யும் பயமுறுத்தியதுபோல ஏதும் நடக்கவில்லை! எங்கேயோ நடந்த சிறு சம்பவம் அன்றி பூதாகரமாக ஏதும் இல்லை என அறிந்து பரம திருப்தி. அதன்பின் மகாநந்தியில் குளித்து தரிசனம் செய்து ஸ்ரீசைலம் கிளம்பினோம். இரவு எட்டு மணியளவில் ஸ்ரீசைலம் கோயிலில் உள்ள திருமண மண்டபத்தில் "கல்யாண உற்சவம்" நடந்தது. பணம் கட்டி நடத்தும் அன்பர்களையன்றி அனைவரையும் அதனைப் பார்க்க அனுமதித்தமையால் அனைவரும் அழகான திருமண மண்டபத்தில் அமர்ந்து "கல்யாண உற்சவம்" காணத் தயாராக இருந்தோம்.

அப்போது உற்சவம் ஆரம்பிப்பதற்கு முன்னாலே அங்கே உள்ள ஓர் மைக்கில் அம்மையார் ஒருவர் தெலுங்கில் சில பாடல்களைப் பாடினார். எனது உறவினர் தர்மபுரி சந்திரசேகரன், "நிகழ்ச்சி ஆரம்பிக்கும் முன்பு நாங்களும் பாடலாமா!

ஸ்ரீ பாலாதிரிபுர சுந்தரியின் பாடல்கள்" என அங்குள்ளவர்களிடம் அனுமதி கேட்டார். என்ன வியப்பு. அவரும் அனுமதிக்க, நெமிலி ஸ்ரீபாலாவைப் பற்றிய இருபாடல்களைப் பாடினோம். எங்கள் அன்னையைப் பற்றி இந்த எளிய கவிஞன் எழுதி திருமதி வாணி ஜெயராம் பாடியுள்ள "அருள்மிகும் தேவி அன்னை பாலா திரிபுர சுந்தரி சரணம்" என்ற பாடலையும், கலைமாமணி கே. வீரமணி பாடியுள்ள "வெள்ளிக் கிழமையிலே - பாலாவின் கோயிலிலே வேதங்கள் ஒலிக்குதடி - நம் வேண்டுதல் பலிக்குதடி" என்ற பாடலையும் கோரஸாகப் பாடினோம். அவர்கள் சுந்தரத் தெலுங்கில் பாடிய பாடல்களைத் தொடர்ந்து மந்திரத் தமிழில் நாங்கள் பாடிய ஸ்ரீபாலா பாடல்கள் ஸ்ரீசைலம் பூராவும் ஒலித்தது. ஆம்! கல்யாண உற்சவ மண்டபத்தில் உள்ள மைக் ஸ்ரீ சைலம் பூராவும் உள்ள ஒலி பெருக்கிகளுக்கு தொடர் புடையதாகையால் அதில்தான் ஸ்ரீ ஸ்வாமியின் சுப்ரபாதம் ஆகியவை ஒலிபரப்பு செய்யப்படுவதால் ஸ்ரீசைலம் பூராவும் ஒலித்தது. ஸ்ரீசைலம் மல்லிகார்ஜுன ஸ்வாமி ஸ்ரீபாலாவின் பாடலைக் கேட்க ஆசை கொண்டார் போலும்! ஸ்ரீசைலம் உள்ள தமிழ் அன்பர்கட்கு மகா சந்தோஷம்! ஆந்திராவில் அன்னை பாலாவின் தமிழ்ப்பாடல்களை முழங்கச் செய்ததில் எங்களுக்கெல்லாம் பெரிய பெருமையாக இருந்தது.

மறுநாள் 18.7.94 திங்கள் இரவு ஹைதராபாத் சென்று பிர்லா மந்திர் என அழைக்கப்படும் "ஸ்ரீ வெங்கடேஸ்வரா திருக்கோயிலை" பரவசத்துடன் பார்த்தோம். எங்கு பார்த்தாலும் வெண்மையான பளிங்கில் அமைந்த அந்த ஆலயம்தான் எவ்வளவு சுத்தமாகவும், சிறப்பாகவும் அமைந்துள்ளது!

மலைமேல் அமைந்த அந்தக் கோயிலில் இருந்து பார்த்தால் ஹைதராபாத் நகரம் முழுமையும் தெரிந்தது.

மறுநாள் 19.7.94 அன்று காலை சார்மினார் சென்று அன்னைபாலாவுக்கு "ஊஞ்சல் சேவை" செய்ய அழகான ஊஞ்சலும் அழகான சின்னச் சின்னப் பாவாடைகளையும் வாங்கிக் கொண்டோம். அன்னை பாலாவுக்கு அழகான ஊஞ்சல் வாங்கத் தான் இந்தப் பயணம் அமைந்ததோ என எண்ணத் தோன்றியது. மாலை 3 மணிக்கு ஹைதராபாத் மிருகக் காட்சிச் சாலையைச் சுற்றிப் பார்க்கச் சென்றபோது வானமெங்கும் ஒரே இருள். இதோ வந்து விடுகிறேன் என்று மிரட்டியது மழை. அப்போது பெய்திருந்தால் அங்கு ஒதுங்கிடக்கூட இடம் இல்லை. முழுவதும் நனைந்து இருப்போம்! உடனே பாலாவுக்கு அப்ளிகேஷன்! ஆம்! அரை மணி நேரம் தள்ளி மழை பொழிய வேண்டும் என்று வேண்டுகோள்! உடனே சாங்ஷன் செய்தாள் பாலா! ஆம்! நாங்கள் சுற்றிப் பார்த்துவிட்டு பஸ் ஏறினதும் 'கொட்டு கொட்டு' என்று மழை! அடை மழை!

அப்படியே மந்திராலயம் கிளம்பிற்று பஸ்! இரவு 12 மணியளவில் சேர்ந்து காலை துங்கபத்திரா ஸ்நானம் முடித்துக்கொண்டு ஸ்ரீராகவேந்திரா ஆலயத்தில் அங்கப்பிரதட்சினம் செய்து, அங்கே மதியம் 12 மணியளவில் நடைபெறும் அன்ன தானத்தில் கலந்து கொண்டு பிரசாதம் உண்டு நெமிலிக்கு திரும்ப உத்தேசம்!

ஹைதராபாத்திலிருந்து கர்னூல் சென்றதும் எங்களுக்கு பெரியசோதனை காத்திருந்தது. ஆம்! "ரெய்ச்சூர் வழியாக மந்திராலயம் செல்ல முடியாத

சாலை உடைப்புக்கள், கர்னூலிலிருந்தும் மந்திராலயம் செல்ல இயலாதவாறு சாலை உடைப்புக்கள். மந்திராலயம் சுற்றி ஓடுகின்ற துங்கபத்திராவில் கட்டுக் கடங்காத வெள்ளம்! மந்திராலயத்திலே நீர் புகுந்துள்ளது" என்ற செய்திதான் அது!

மந்திராலயம் செல்வதற்காகவே ஐந்து நாட்கள் பயணம் அமைத்து நான்கு நாட்கள் நன்கு அமைந்து விட்டன. நான்காவது நாள் இரவில் இப்படி யொரு சோதனையா! கர்னூலில் இருந்து அப்படியே நெமிலி திரும்ப வேண்டியதுதான் என்ற முடிவு கேட்டு எல்லோரும் வெறுத்துப் போய்விட்டார்கள். ஸ்ரீ பாலாவை வணங்கிவிட்டுத்தானே வந்திருக்கிறோம்! எப்படி இந்த நிலை வந்தது! ஏன் இந்த சோதனை! யாருக்கும் விளங்கவேயில்லை. 10 மணியளவில் "தைரியமாக செல்வோம்! சாலை வசதி இல்லை யென்றால் திரும்பி விடுவோம்" என்று முடி வெடுத்தோம்! அதே நேரத்தில் இரவுப் பயணம் செல்கிறோமே! 'நக்ஸலைட்' எவரும் வழி மறித்தால் என்ன செய்வது? என்று மீண்டும் ஒரு குழப்பம்! கடைசியில் ஸ்ரீபாலாவை ஒருமுகமாகப் பிரார்த்தனை செய்தோம்! என்ன ஆச்சரியம். எங்கள் பஸ் கிளம்பும் போது இரண்டு ஆந்திர போலீஸ்காரர்கள் கையில் துப்பாக்கியுடன் எங்களோடு காவலுக்கு வந்து பஸ்ஸில் ஏறிக்கொண்டார்கள்.

என்ன இது அற்புதம்! ராம லட்சுமணர் விக்கிரக ஆராதனையை மறுநாள் காலையில் மந்திராலயாவில் பார்க்க வேண்டும் என்பதற்காக ராம-லட்சுமணர்போல இந்த இருவரும் வில்லுக்குப் பதிலாக துப்பாக்கி ஏந்தி எங்கள் பஸ்ஸில் காவலாக வருகிறார்களா? என்னே பாலாவின் திரு

விளையாடல்! தமது பக்தரான ஸ்ரீ ஆஞ்சநேயர் அவதாரமாக பேசப்படும் ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள் ஆலயத்தை பார்ப்பதற்கு ஒருவேளை ஸ்ரீராம - லட்சுமணர் இப்படி உதவினரோ?

இந்த அத்தியாயம் எழுதும்போது 27.8.94 சனிக்கிழமை காலை **7.30** ஓர் பெரிய ஆச்சரியம். சென்னை வானொலி நிலையத்தில் "பாடலும் பொருளும்" என்ற தலைப்பில் திருமதி பிரேமா ஹரிஹரன் அவர்கள் தியாகராஜ கீர்த்தனை விளக்கம் தருகிறார். விளக்கம் பூராவும் ஸ்ரீராம - லட்சுமணரைப் பற்றியும் - ஸ்ரீராம பக்தியைப் பற்றியும் விவரம் கூறுகிறார்! இது எப்படிப்பட்ட தெய்வீகப் பொருத்தம். ஸ்ரீராம - லட்சுமணரைப் பற்றி எழுதும்போது நெமிலி ஸ்ரீ பாலா சன்னிதியில் உள்ள ரேடியோவில் இருந்து இந்த விளக்கம் கேட்கிறது! மீண்டும் மீண்டும் அந்த பாலாவின் அற்புதத்தை எண்ணியெண்ணி வணங்கி விட்டு இதோ மீண்டும் கட்டுரையைத் தொடர்கிறேன்.

மந்திராலயம் செல்லும் வழியில் எங்கு சாலை பழுதுபட்டிருக்கும் என்று எண்ணினோமோ அங்கு சரி செய்யப்பட்டுவிட்டு எங்கள் பஸ் தொடர்ந்து சென்று மந்திராலயம் அடைந்தது.

எங்களுடன் வந்த அந்த இரு போலீஸ்காரர் களும் இறங்கிச் சென்றனர். அவர்களை நன்றியுடன் அனுப்பி வைத்தோம்.

அப்பாடி - மந்திராலயம் வந்து விட்டோம்! இதுவே பெரிய புண்ணியம் தானே! ஒரு விடுதியில் அனைவரும் தங்கினோம். விடுதிக்காரர் சொன்ன தகவல் பூகம்பம்போல் இருந்தது.

"எல்லாரும் நிம்மதியா தூங்கிட்டு விடியற் காலை 4 மணிக்கு எழுந்து இங்கேயே பாத்ரூம்லே குளிச்சுடுங்கோ! துங்கபத்ரா ஆற்றில் வெள்ளம் கரை புரண்டு ஓடறது! நிறைய போலீஸ்காரர்களைப் போட்டிருக்கா! தண்ணீர்லே காலை வெக்கிறதுக்குக் கூட யாரையும் "அலவ்" பண்றதில்லே!" என்ற தகவல் கேட்டு கண் கலங்கினோம். இவ்வளவு தூரம் வந்து விட்டு துங்கபத்ராவில் குளித்து ஸ்ரீராகவேந்திரரையும், ஸ்ரீராம லட்சுமண விக்கிரக ஆராதனையையும் பார்த்தால்தானே மனதுக்கு நிம்மதி! சரி! என்ன பண்றது! ஸ்ரீ பாலா விட்ட வழி என்று தூங்க ஆரம்பித்தோம். விடியற்காலை 4 மணியளவில் பாத்ரூமில் ஒவ்வொருவராக குளிக்க ஆரம்பித்தோம். எங்கள் குழுவில் உள்ள அரக்கோணம் சந்திரசேகர் மற்றும் மதுராந்தகம் பாலு ஆகியோர் "எதற்கும் துங்கபத்ரா ஆற்றைப் பார்த்துவிட்டு வருகிறோம்" என்று அந்த விடியல் இருட்டிலேயே கிளம்பினர். அவர்கள் திரும்பி வந்து பரபரப்புடன் கூறிய செய்தி பாகாக இனித்தது. ஆம்! "இரவில் வெள்ள ஓட்டம் குறைந்து விட்டதாம். முதல் படிக்கட்டு வரை இருந்த வெள்ளம் உள்ளே போய்விட்டதால் அந்த ஓரமாக உள்ள இடத்தில் போலீஸ் காவலுடன் பக்தர்களுக்கு துங்கபத்திரா ஸ்நானம் நடக்கிறது என்ற சேதிதான் அது. எப்படி இருக்கும் எங்களுக்கு! மந்திராலயமே வர முடியுமோ என்ற நிலை மாறி மந்திராலயம் வந்து விட்டது! துங்கபத்திரா நதியில் குளிக்கவே இயலாது என்ற நிலை மாறி குளிக்க வகை ஏற்பட்டது! எப்படி! எப்படி! மகிழ்ச்சி தாங்கவில்லை. அனைவரும் துங்கபத்திரையில் குளித்து சிலர் அங்கப் பிரதட்சண மும் முடித்து ஸ்ரீ சீதா ராம லட்சுமண விக்கிரக ஆராதனையை காலை 6½ மணியளவில் சிறப்பாகக் கண்டு கொண்டிருக்கிறோம்.

இதோ இந்தக்கட்டுரை எழுதும் இந்த நிமிடத்திலே ஸ்ரீபாலாவின் மற்றுமோர் அற்புதம்! எழுதவே கைகள் நடுங்குகின்றன. **27.8.94 சனிக்கிழமை காலை 8 மணி.** ஸ்ரீபாலா திரிபுர சுந்தரியின் சன்னிதியில் உள்ள ரேடியோவில் சென்னை விவித் பாரதியில் "ஸ்ரீராமன் புகழ் பாடும் சந்திரோதயம். சீதாவின் புகழ் பாடும் அருணோதயம்" என்ற பாடல் ஒலிபரப்பாகிறது.

என்ன இது! இந்தக் கட்டுரை எழுதும் இன்றைக்கு (27.8.94) காலை 7½ மணிக்கு நான் முன்பு எழுதியதுபோல் ஸ்ரீ சீதா ராம லட்சுமணர்களைப் பற்றி விளக்கவுரை - இப்போது 8 மணியளவில் விவித் பாரதியில் "ஸ்ரீராமனைப் பற்றிய" இசைப்பாடல், ஸ்ரீ பாலாவின் சன்னிதியில் ஒலிக்கிறது! என்ன சார் இது! 1994-ல் கூட இப்படியும் ஓர் அருள் விளையாட்டு! என்னே பாலாவின் கருணை.

மீண்டும் எனது கட்டுரையைத் தொடர்கிறேன். ஆஞ்சநேயரின் அவதாரமாக கூறப்படும் ஸ்ரீராகவேந்திரரின் சமாதியைப் பக்திப் பரவசத்துடன் காண்கிறோம்! மந்திராலய மகானை மகிழ்ச்சியுடன் தரிசனம் செய்கிறோம். சார்... ஒரு நிமிடம் இருங்கள். கட்டுரையைத் தொடர இயலாதவாறு ஓர் அன்புத் தடங்கல் ஆம்! ஸ்ரீபாலாவின் சன்னிதியில் உள்ள ரேடியோவில் விவித்பாரதியில் திரு. டி.கே.எஸ். கலைவாணன் பாடிய "பலம் பொருந்திய அனுமான்" பாடல் என்ற பாடல் ஒலிபரப்பாகிறது. இப்போது மணி காலை 8.10.

என்ன இது. 27.8.94 காலை 7.30, 8.00, 8.10 ஆகிய நேரங்களில் நான் கட்டுரை எழுதும் வார்த்தைகட்கு ஏற்ப ஸ்ரீபாலா வானொலி மூலம் என்னை

வாழ்த்துகிறாளா? இந்த சின்னஞ்சிறியவனுக்குக்கூட இத்தனை பெரிய ஆசீர்வாதமா! இந்தக் கட்டுரையை முடிக்க இயலாமல் விழியில் ஆனந்தக் கண்ணீர் வழிகிறது. மனதைத் திடப்படுத்திக்கொண்டு இந்தக் கட்டுரையை முடிக்க எண்ணி மீண்டும் தொடர்கிறேன். வாருங்கள்! மீண்டும் மந்திராலயம் செல்வோம். மந்திராலயத்தில் தரிசனம் யாவும் சிறப்பாக முடிந்தது! காலை மணி 8. அனைவருக்கும் சாப்பாடு டிக்கெட் ஆலயத்தில் கொடுத்தார்கள். ஆசை ஆசையாக அனைவரும் டிக்கெட் பெற்றுக் கொண்டு பிரசாதம் பெறும் கற்பனையில் இருந்தபோது பஸ் டிரைவர் பாலு கூறியது அதிர்ச்சிக் குள்ளாக்கியது.

"சார், 12 மணிக்கு சாப்பிட்டுவிட்டு கிளம்பினா ஆந்திரா பார்டரான சித்தூரைத் தாண்டு வதற்கு நாளை விடியற்காலை 2 மணி ஆயிடும். நமது பர்மிட் இன்று இரவு 12 மணியுடன் முடிந்து விடுகிறது. ஆந்திரா போலீஸ் மடக்கிட்டா ஆயிரக்கணக்கில் பணம் கட்ட வேண்டிவரும். இன்னமும் ஒருமணி நேரம் கூட சுற்றிப்பாருங்க! சரியா 10 மணிக்கு கிளம்பினா சித்தூருக்கு 12 மணிக்கு முன்னாலே போய் ஆந்திரா பார்டரைத் தாண்டிடலாம். சரியாக 2 மணிக்கு நெமிலிக்கு போயிடலாம் என்றார்.

என்ன செய்வது என்று விளங்கவில்லை. "சரி! மந்திராலயம் வரவே முடியாது என நினைத்தோம். வந்து விட்டோம். துங்கபத்திராவில் குளிக்கவே முடியாது என நினைத்தோம்! குளித்து விட்டோம்! தரிசனமும் முடிந்தது! போதும்! இந்த அளவுக்கு ஸ்ரீபாலா அருள் தந்தாளே அதுவே போதும்! மந்திராலயத்தில் பிரசாதமாக வழங்கும் அன்ன

தானத்திற்கும் ஆசைப்பட்டால் அது பேராசையாகி விடும்! அனைவரும் கிளம்பலாம் வாருங்கள்" என்று கிளம்பும்போது மீண்டும் ஓர் அதிசயம் நிகழ்ந்தது. ஆம்! எமது நண்பர்களில் ஒருவர் கூறியசெய்தி தேனாக இனித்தது. "சார், இன்று (20.7.94 புதன்கிழமை) துவாதசியாம். துவாதசியன்று மட்டும் மந்திராலயத்தில் வழக்கமாக 12 மணிக்கு சாப்பாடு போடுவதற்குப் பதிலாக 9 மணிக்கே சாப்பாடு போடுவார்களாம்! எல்லோரும் நிதானமாக சாப்பிட்டு விட்டு 10 மணிக்கே டிரைவர் சொன்னது போலக் கிளம்பிவிடலாம்'' என்றாரே பார்க்கலாம். அடேயப்பா! என்னே பாலாவின் கருணை! என்னே மந்திராலய மகானின் ஆசீர்வாதம்! என்னே ஸ்ரீசீதா ராம லக்ஷ்மணரின் அருள்!

அப்படியே மிகவும் திருப்தியாக மந்திராலயத்தில் பிரசாதமாக உணவு உட்கொண்டு விட்டு காலை 10 மணிக்கு கிளம்பி 21.7.94 வியாழக்கிழமை விடியற்காலை 2 மணிக்கு நெமிலிக்கு சௌக்கியமாக அனைவரும் வந்து சேர்ந்தோம்.

மறுநாள் 22.7.94 அன்று "முதல் ஆடி வெள்ளி" உற்சவம். அன்னை பாலாவுக்கு சிறப்பான வழிபாடு - அன்னதானம் - 1008 கனிமாலை அலங்காரம் - நாதஸ்வரக் கச்சேரி - இரவு 8 மணிக்கு ஹைதராபாத்தில் வாங்கி வந்த அழகான ஊஞ்சலில் அன்னை பாலாவின் "உய்யால சேவா" அதாவது ஊஞ்சல் சேவை சிறப்பாக நடைபெற்றது. அன்னை பாலாவின் ஆடிவெள்ளி நிகழ்ச்சியினையும் ஊஞ்சல் சேவையினையும் சென்னை தொலைக்காட்சி நிலையம் 2-வது சேனலில் 29.7.94 அன்று ஆடி இரண்டாம் வெள்ளியன்று மதியம் ஒரு மணிக்கு "சிற்றுலா

நிகழ்ச்சியில்" ஒளிபரப்பி அன்பர்கள் அனைவரையும் ஆனந்தப்படுத்தியது!

வாருங்கள் இனி அன்னை பாலாவின் சுப்ரபாதம் - அவளது பாடல்கள் - யாவற்றையும் பாடி. அவளருள் பெறுவோம்.

**ஸ்ரீ பாலா பீடத்தின் முகவரி**

**ஸ்ரீ பாலாதிரிபுர சுந்தரி பீடம்,**<br>**22, சத்திரத்தெரு, நெமிலி – 631 051**<br>**வடஆற்காடு அம்பேத்கார் மாவட்டம்.**

நெமிலி அரக்கோணத்தினின்று 16 கி.மீ. தொலைவிலும், காஞ்சிபுரத்தினின்று 24 கி.மீ. தொலைவிலும் உள்ளது. பிரதி வெள்ளி மாலை 6 மணிக்கு அபிஷேகம். பிரதி ஞாயிறு காலை சிறப்பு வழிபாடு. அனைவரும் அன்னை பாலாவின் அருள் பெற்று வளமுடன் வாழ்வோமாக! ஸ்ரீ பாலா திரிபுர சுந்தரியின் லீலா விநோதங்களை அறிந்த அன்பர்கள் யாவருக்கும் எல்லா நலமும் கிடைக்க அன்னை பாலாவைப் பிரார்த்தனை செய்கிறேன்.

**வாழ்க வளமுடன்**

# ஸ்ரீ நெமிலி பாலா திரிபுர சுந்தரி அன்னை சுப்ரபாதம்

(நெமிலி எழில்மணி)

---

## "பாலாவே உந்தன்..."

(நெமிலி எழில்மணி)

பாலாவே உந்தன் பாதாரம் வேண்டி
பண்ணாலே நான் பாடினேன்
மண்மீது நாளும் மாதாவே உன்னை
மறவாது நானும் தேடினேன் (பாலாவே)

பிள்ளைஎன் உள்ளம்தனில்
கள்ளம்அது இல்லையென
வெள்ளைநிறம் அள்ளித்தர வந்தாயம்மா
எந்நாளும்நீ தாயல்லவோ
எப்போதும்நான் சேயல்லவோ
கன்னித்தமிழ் உன்னைத்தொழத் தித்திடும்
காற்றோடு வானம் பாடும்உன் கீதம்
கனிவோடு கருணை தருமேநின் பாதம்
உன்நாமம் தானே என்னாளும் வேதம் (பாலாவே)

அமைதி தவழ் நெமிலி தனில்
சுமை தன்னைத் தான் நீக்க
அன்னை பாலா எனவே வந்தாயம்மா
நவராத்திரியில் நீ நாயகி
சுபயோகமே தரும்பைரவி
ருத்ரம்முதல் சமகம்உனை பற்றித்தொழும்
மந்திரங்களே புஷ்பங்களாம்
மறைகின்றதே கஷ்டங்களாம்
மனக்கோயிலில் வாழ்வாயம்மா (பாலாவே)

# தேவியின் அருளிருந்தால்

(நெமிலி எழில்மணி)

தேவியின் அருளிருந்தால் – நம்
துன்பம் எல்லாம் தீரும் – உயர்
இன்பம் எல்லாம் சேரும் – நம் வாழ்விலே
அன்பு மழை பொழியும் – அதனால்
நன்மை வந்து நிறையும் (தேவியின்)

காஞ்சி தன்னில் காமாட்சி ஆக
குறைகள் தீர்த்தாயே – நல்ல
நிறைகள் சேர்த்தாயே
மதுரை தன்னில் மீனாட்சி ஆக
மலர்ந்து நின்றாயே – எங்கள்
மனதில் வந்தாயே – அதனால்
அன்பு மழை பொழியும் – எந்நாளுமே
நன்மை வந்து நிறையும் (தேவியின்)

மயிலை தன்னில் கற்பகத் தாயாய்
மகிமை அடைந்தாயே – எழில்
மஞ்சள் கொடுத்தாயே
நெமிலி தன்னில் பாலாவாய் வந்து
நிம்மதி அளித்தாயே – எங்கள்
நெஞ்சில் நிறைந்தாயே – அதனால்
அன்பு மழை பொழியும் – எந்நாளுமே
நன்மை வந்து நிறையும் (தேவியின்)

# திரிபுரசுந்தரி ஆடுகின்றாள்

(நெமிலி எழில்மணி)

திரிபுர சுந்தரி ஆடுகின்றாள் – என்
தேனிசை மலர்கள் சூடுகின்றாள்
வரம்தர நெமிலியில் வாழுகிறாள் – நல்ல
வழிகளை நமக்கு கூறுகிறாள் (திரிபுர)

நெஞ்சம் அவள்வாழும் இடமானது – அவள்
நினைவால் எல்லாமே நலமானது
குங்குமம் அளித்தாள்
குறைகளைத் தடுத்தாள்
குழந்தையின் வடிவாக உருவெடுத்தாள்
கொலுவினில் எழிலுடன் வரம்தர நிறைவுடன் காட்சியும்
தருகின்றாள் (திரிபுர)

பாடும் இசைப்பாட்டில் வசிக்கின்றாள் – என்
பாடல் அவள் கேட்டு ரசிக்கின்றாள்
புன்னகை புரிந்தாள்
புவிதனில் நிறைந்தாள்
புகழ்நவ ராத்திரியில் ஜொலிக்கின்றாள்
பாதங்கள் நடந்திட வேதங்கள் ஒலித்திட பாவையும்
வருகின்றாள் (திரிபுர)

# அன்பைப் பொழிகின்ற பாலா

(நெமிலி எழில்மணி)

அன்பைப் பொழிகின்ற பாலா – எம்
ஆதாரம் நீயே பாலா (அன்பை)

இன்பம்தரும் அருட் சோதியே – அந்த
ஈசன் வடிவில் பாதியே
உன்பதம் நாடினோம்
ஊரெங்கும் தேடினோம்
என்றும் உன்னைப் பாடினோம் (அன்பை)

ஏக்கத்தை நீக்கும் தேவியே – எங்கள்
ஐயத்தைப் போக்கும் காளியே
ஒன்றாக வாழவைப்பாய்
ஓங்கிட வரம் கொடுப்பாய்
ஒளடதமாய் நீ இருப்பாய் (அன்பை)

## பாலா த்ரிபுர சுந்தரியே!

(நெமிலி எழில்மணி)

பாலா த்ரிபுர சுந்தரியே – உன்னைப்
பாடாத நாள் இல்லையே – உன்னைத்
துதி பாடுவோம் – நல்ல
கதி தேடுவோம் – தலை
விதி தன்னையே மாற்றுவோம் (பாலா)

மனம் பார்த்து மகிழ்வோடு
அமர்ந்தாய் அம்மா – நல்ல
மணம்வீசும் மலராக
மலர்ந்தாய் அம்மா
சினம் நீக்கி எமைக் காக்க
சிரித்தாய் அம்மா – நான்
தினம் கேட்கும் வரம்யாவும்
அளித்தாய் அம்மா (பாலா)

பொருளோடு புகழ்யாவும்
தருவாய் அம்மா – என்றும்
பரிவோடு எமைக்காக்க
வருவாய் அம்மா
அருள்வீசும் விழியாலே
பார்த்தாய் அம்மா – வரும்
இருள்நீக்கி ஒளிவீசி
காத்தாய் அம்மா (பாலா)

## திரிபுர சுந்தரி தேவி

### (நெமிலி எழில்மணி)

திரிபுர சுந்தரி தேவி – நின்
திருவருள் தராத தேனோ ?
திருவருள் தராத தேனோ ? (திரிபுர)

விரிசடை சிவனின் ஒளிதரும் துணையே
வேண்டிடும் எங்களைப் பாராய்
எரிதணல் மெழுகாய் உருகிடலாமா
எங்களை நீயே காத்திடுதாயே
திருவருள் தராத தேனோ ?
திருவருள் தராத தேனோ ? (திரிபுர)

ஒன்பது நாளும் நின்புகழ் பாடும்
அன்பர்கள் ஏங்கிடலாமா
நின்பதம் காண நெமிலிக்கு வந்தோம்
நிம்மதி தன்னை நீதருவாயே
திருவருள் தராத தேனோ ?
திருவருள் தராத தேனோ ? (திரிபுர)

## என் தாயே த்ரிபுர சுந்தரி

(நெமிலி எழில்மணி)

என்தாயே த்ரிபுர சுந்தரி
தருணம் இதுவந்தாதரி
தேவியன்றி யார்கதி (என் தாயே)

நீயில்லா நெஞ்சிலே
நிம்மதி வந்து சேருமோ
நீதானே எம்மை ஈன்றெடுத்தாய்
நாங்கள் உனக்கு பாரமோ
தாயின் வாக்கும் கூறுமோ
தாபம் யாவும் தீருமோ (என் தாயே)

மனம் நின்பதத்தைத் தேடுதே
மகிழ்ச்சி யாவும் கூடுதே
தினம் நின்தோற்றம் காணக்காண
கால்கள் கோயில் நாடுதே
அமைதி தன்னை அருளுவாய்
நெமிலி வாழும் தெய்வமே (என் தாயே)

# அருள்மிகும் தேவி

(நெமிலி எழில்மணி)

அருள்மிகும் தேவி அன்னை பாலா
திரிபுர சுந்தரி சரணம்
இருள்தனை நீக்கும் தாயே பாலா
திரிபுர சுந்தரி சரணம்
திரிபுர சுந்தரி சரணம் – பாலா
திரிபுர சுந்தரி சரணம் (அருள்மிகும்)

மாரியைப் பொழியும் மாரியும் நீயே
அன்புடன் வருவாய் அம்மா
காரியம் நடத்திடும் காளியும் நீயே
இன்பம் தருவாய் அம்மா
நாளும் கோளும் ஏது – சிவ
நாயகி துணைவரும் போது (அருள்மிகும்)

அருள்நவ ராத்திரி ஒளிவிளக் கேற்றி
சரண் அடைந்தோமே தேவி
வரம்தர நீயே இருகரம் நீட்டி
வருவாய் அம்மா தேவி
சாமுண்டீஸ்வரி தேவி – ஸ்ரீ
அகிலாண்டேஸ்வரி தேவி (அருள்மிகும்)

## Sri Om

By the Grace of Divine Mother Sri Om Adhi Sakthi Devi, I am glad to bless this book "Bala Thirupurasundari Leela Vinodhangal" which has written by Kavingar Nemili Ezhil Mani.

I pray to Devi that our Nemili Ezhil Mani's devine work should continue throughout his life.

I bless Vanathi Thirunavukkarasu of Vanathi Pathippagam for having published this book.

11.9.94 **SRI OM**

SRI OM ADI SAKTHI ASHRAM
Avalur Village, Ocheri (via)
Perumbulipakkam Post,
N.A.A. Dt. – 632 531.



நூலாசிரியர்
இசைக்கவிச்செம்மல் கவிஞர்
நெமிலி எழில்மணியைப்
பற்றி சான்றோர்கள் திறனாய்வு

"என் அன்பர், தேவி உபாசகர் நெமிலி கவிஞர் எழில்மணியவர்கள் செம்மனச் செம்மலாய் கவிபாடும் திறன் உடையவர்; உத்தம குணசீலர். திரு. சீர்காழி கோவிந்தராஜன் அவர்கட்கும், அவருடைய தவப் புதல்வர் சிவசிதம்பரத்துக்கும், என் அன்புக்குரிய வானதி திருநாவுக்கரசுக்கும் நண்பராய்த் திகழ்பவர். இவர் அன்னை பாலாவின் அற்புதங்கள் என்னும் இனிய நூலைக் கனியமுதம்போல எழுதி விருந்தாகப் படைக்கின்றார், எல்லோரும் ஓதி உய்க.

அன்னைநல் பாலாவின் அற்புதம் என்னும்நூல்
தன்னை எழுதித் தருகின்றார் – பன்னும்
கவிஞர் எழில்மணி கந்த னருளாலே
புவிமீதில் வாழ்க பொலிந்து

அருள்மொழியரசு டாக்டர் திருமுருக கிருபானந்த வாரியார் ஸ்வாமிகள் "அன்னை பாலாவின் அற்புதங்கள்" என்னும் நூலில்

"நாளும் அன்னை பாலா திரிபுர சுந்தரியின் அன்பிலே திளைத்து எனது அன்புத் தம்பியாகப் பழகிவரும் அருட்கவிச் செம்மல் கவிஞர் நெமிலி எழில்மணி அவர்கள் அன்னையின் அற்புதங்களை

தமக்கே உரிய துள்ளிவரும் செந்தமிழ் நடையினிலே சுகமான ராகங்களாகச் சுவையாகப் படைத்துள்ளார்".

"ஊருக்கெல்லாம் அவள்தான் உபகாரி - திருவேற்காட்டினிலே வாழும் கருமாரி", "மாரியைப் பொழிபவள் மாரியம்மா - துயர் மாறிடச் செய்வதும் மாரியம்மா" என்று இவர் இயற்றிய பல அம்பாள் பாடல்களை நான் பாடும்போது இசையோடு அருள் மணக்கும் தெய்வீக நிலையுணர்ந்தேன்.

பத்மஸ்ரீ – இசைமணி – டாக்டர் சீர்காழி எஸ். கோவிந்தராஜன்
கவிஞர் நெமிலி எழுதிய வானதியின் "திரிபுர சுந்தரி
திருவிளையாடல்" என்னும் வெளியீட்டில்

கவிஞர் நெமிலி எழில்மணியின் தெய்வ அருட்பாடல்களை இசைமாமணி டாக்டர் சீர்காழி கோவிந்தராஜன் அவர்கள் தமக்கே உரிய கம்பீரமான குரலில் பாடும்போது கேட்டால் அப்படியே உள்ளத்தை உருக்கக்கூடியதாக இருக்கும் காரணம் கவிஞர் நெமிலி எழில்மணியின் பாடலிலே ஓசைநயமும், பொருள் நயமும் சீர்காழியின் இசை நயத்தில் மிளிரும்.

புத்தக வித்தகர் வானதி திருநாவுக்கரசு அவர்கள்
கவிஞர் நெமிலி எழில்மணி எழுதிய "தெய்வ அருட்பாடல்கள்"
என்ற நூலில்.


KOVILOOR ANDAVAR
A. No. 16120
LIBRARY, KOVILOOR

